# தமிழர் வாழ்த்து

(இலக்கியக் கட்டுரைகள்)

ஆசிரியர்

ரெ. முத்துக் கணேசன்

விற்பனை உரிமை :

உமையவள் பதிப்பகம்

முத்து விலாஸ், நியூ டவுன், :: காரைக்குடி.

இராமநாதபுர மாவட்டம்.

## நன்றி

இக் கட்டுரைகளில் சில அனைத்து இந்திய திருச்சி வானொலி நிலையச் சொற்பொழிவாய் அமைந்தவை. மற்றும் சில பத்திரிகைகளிலும், சிறப்பு மலர்களிலும் வெளிவந்தவை. இவற்றை வெளியிட இசைவு தந்த அனைத்து இந்திய திருச்சி வானொலி நிலையத்தினருக்கும், ஆசிரியப் பெருந்தகையினருக்கும், என் உளம் நிறைந்த நன்றி!

வணக்கம்.

ரெ. முத்துக்கணேசன்

கல்லுக்கட்டி; காரைக்குடி-1

10—5—1968

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | |
|---|---|
| நல்லுரை வெண்பா (கவிதை) | 1-00 |
| முத்து மாலை ,, | 1-25 |
| முத்தொள்ளாயிரம் (உரை நூல்)<br>(இவ்வுரை நூல் முன்பு சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் வகுப்பிற்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தது) மூன்றும் பதிப்பு | 2-00 |
| தமிழ்த் தொகை (தொகுப்புரை நூல்) | 1-75 |

குறிப்பு :- நல்லுரை வெண்பா ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது

'RUBIES OF WISDOM'

English Translation

By :

V. RM. Chettiar, B. A.

## பொருள்


| | | பக்கம் |
|---|---|---|
| 1 | தமிழர் வாழ்த்து | — 9 |
| 2 | தமிழ்ப் பழமொழிகள் | — 23 |
| 3 | விடுகவிகள் -1968, பொங்கல் மலர்; சென்னை நகரத்தார் சங்கம் | — 34 |
| 4 | பொருள் மொழிகள் | — 41 |
| 5 | வீர மொழிகள் | — 48 |
| 6 | அறமாமோ? | — 55 |
| 7 | உலகைக் காப்பவர் யார்? | — 61 |
| 8 | நீரும் மலரும் -1950 -ஜூலை; கலைமகள் இதழ். | — 67 |
| 9 | கடிதக்கலை - இலக்கியத்தில் -16 - 3 - 1961; திருச்சி வானொலிச் சொற்பொழிவு. (இசைவுபெற்றது) | — 73 |
| 10 | நமச்சிவாயப் புலவரின் தனிப் பாடல்கள் - 30 - 5 - 1946; திருச்சி வானொலிச் சொற்பொழிவு. (இசைவுபெற்றது) | — 81 |
| 11 | முத்தொள்ளாயிரம் -1957 நவம்பர் - முதல் பதிப்பில் வெளி வந்தவை. | — 91 |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 18 | 17 | விடைதோர் | விடைதோறு |
| 18 | 22 | கொள்பவரோடு | கொள்பவரொடு |
| 20 | 12 | பெண்னின் | பெண்ணின் |
| 46 | 20 | மாட்சியில் | மாட்சியின் |

# தமிழர் வாழ்த்து

மனிதன் பிறக்கின்ருன். பிறந்த மனிதன் உண்டு வளர்கின்ருன். பிறப்பதும் உண்பதும் பின் இறப்பதும் மனித இயற்கை. வெந்த சோற்றை உண்டு விதிவரும் காலத்து இறப்பதை உயர்ந்தோர் விரும்பவில்லை. உலகிடைப் பிறந்த ஒரு மனிதன் நல்ல செயல்களைத் தன் வாழ்நாளில் ஆற்ற வேண்டும். நல்ல செயல்களைச் செய்ய முற்படுங் காலத்து இடையூறுகள் சூழலாம்; ஆனுல் அவற்றைத் துணிவுடன் எதிர்த்து முன்னேறி மக்களுக்கும் சமுதாயத்திற்கும் நல்ல செயலை எந்த ஆண்மகன் ஆற்றுகின்ருனே அவனை உலகம் புகழ்கின்றது; வாழ்த்துகின்றது. ஆகவே பிறவியின் பயன் அப் பிறவியிலேயே நாட்டுமக்களின் வாழ்த்தைப் பெறுதலொன்றே என்பது நமக்குத் தெளிவாகின்றது. மலர் மலர்கின்றது. மணத்தை வெளிப் படுத்துகின்றது. மலர் எவ்வாறு இவ்வுலகிற்கு

மணத்தை வெளிப்படுத்திப் பணி புரிகின்றதோ அவ்வாறே மக்களுக்காகப் பணிபுரிந்த ஒருவனை உலகம் வாயார வாழ்த்துகின்றது. பொதுவாக ஒரு தாய் தன் குழந்தை தும்மினுல் "நூறு வயது வாழ்க" என்று வாழ்த்துகின்ருள். பெரியவர்கள் சிறுவர்களை நீடு வாழ்க என வாழ்த்துகின்ருர்கள். போரில் வெற்றி பெற்ற வீரர்களைப் புகழ்ந்து மக்கள் வாழ்த்துக் கூறுகின்ருர்கள். திருமண நாளில் மக்கள் ஒன்றுகூடி மணமக்களை நீடுழி வாழ்க என வாழ்த்துகின்ருர்கள். இவ்வாருகக் குழந்தைகளையோ, சிறுவர்களையோ, வீரர்களையோ, மணமக்களையோ பொதுப்பட வாழ்த்துதல் மனித இயற்கையாகின்றது. பொதுப்பட வாழ்த்தும் வாழ்த்தைத் தமிழர்கள் பெரிதும் வரவேற்ருர்கள். பெறுதற்கரிய பெருஞ் செயலை மக்கள் தங்கள் வாழ் நாளெல்லாம் நினைந்து நினைந்து மகிழ்ந்து போற்று தற்குரிய செயலை ஆற்றிய அரசனை – குடிமகனை – குடிமகனை அவர்கள்தம் செயலுக்காகப் போற்றி வாழ்த்தினர்கள். புலவர்களும் புகழ்ந்து அம் மகிழ்ச்சியை வாழ்த்துப் பாடலாக வெளிப்படுத்தினர்கள். அப்பழுக்கற்ற தூய்மை உள்ளத்திலிருந்து நிலைத்த சொற்களால் ஆகிய அவ் வாழ்த்துப் பாடலைச் சிறுவர்களும் பெரியவர்களும் சொல்லி வாழ்த்தினர்கள்; இங்ஙனம் தமிழர்கள் தம் வாழ்க்கையில் திருமணப் பருவம் முதல் தேர்ந்த முதுமைப் பருவம் வரையில் அவ்வப் பருவகால நிகழ்ச்சிகளுக் கேற்றவண்ணம் செயல்கண்டு வாழ்த்தினர்கள். இவ்வாறு தமிழகத்தில் மன்னன் முதல் மக்கள் வரை அனைவரும் தம் வாழ்நாளில் தாம் செய்த நற்செயலுக்காக மக்கள் வாழ்த்தைப்

பெறுதலொன்றே பெறும் பேறெனக்கொண்டனர். இதனைத் தமிழ் இலக்கிய வரலாறு நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றது.

தமிழர்கள் வாழ்த்தியலை நாம் ஆராயும்பொழுது அதனை ஆறு வகையினதாகக் கொள்ளலாம். அவ் வகை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்புற்று விளங்கக் காணுகின்றோம். அவற்றைத் தொகுத்து இலக்கியமாகப் போற்றினார்கள் புலவர்கள். தமிழர் வாழ்த்தியல் கடவுள் வாழ்த்து–புறநிலை வாழ்த்து–வாயுறை வாழ்த்து–அவையடக்கியல் வாழ்த்து–செவியறிவுறூஉ வாழ்த்து–திருமண வாழ்த்து என வழங்கப்பெறும். அவற்றை நாம் பார்ப்போமாக!

## கடவுள் வாழ்த்து

தமிழர்கள் தாங்களும் உலகமும் வாழக் கடவுளைப் போற்றி வழுத்தத் தொடங்கினார்கள். அவர்தம் பெருமைகளைப் போற்றினார்கள். புலவர்கள் தாங்கள் பாடுவதற்கு எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிவு பெறுவதற்குக் கடவுளை வழுத்தினார்கள். இதனை ஏற்புடைக் கடவுள் வாழ்த்து என்றும் வழிபடு கடவுள் வாழ்த்து என்றும் இருவகைப் படுத்தினார்கள். புலவன் நூலை ஒட்டிய இறைவனையாவது, இறைவன் அடியார்களையாவது இறைஞ்சுவது ஏற்புடைக் கடவுள் வாழ்த்து எனப் பெயர் பெறும். வழிபடு கடவுள் வாழ்த்து என்பது தன் மதக் கடவுளையாவது, தான் நாள்தோறும் வழிபடும் கடவுளையாவது வாழ்த்திக்கொள்ளுதலாகும். இவ் வாழ்த்துக்களை முன்னிலையாகவும்

படர்க்கையாகவும் அமைத்துக் கொண்டார்கள். சங்ககாலப் புலவர்கள் பெரும்பாலும் இறைவனது தனித் தன்மையைச் சுட்டியும் வாழ்த்திஞர்கள்; பொதுத்தன்மையைக் காட்டிப் புகழ்ந்தும் வாழ்த்தி ஞர்கள். நீலமேனி வாலிழைபாகனுகக் கண்டார்கள்; இயற்கைப் பொருள்களின் வடிவமாகவும் கண்டார்கள். ஆனல் திருவள்ளுவரோ இறைவனேக் காட்டிலும் இறைவனது திருவடியையே பெரிதும் போற்றி வணங்குகின்ருர். வழிபாட்டிற்குரிய சிறந்த இடம் இறைவனது திருவடிதான் என்பது சமய மரபு போலும். ஆகவேதான் அருளே நல்கும் அவனது திருவடிப் பெருமையைக் கூறி வணங்கு கின்ருர். அவர் பாடிய திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பத்தில் ஏழு பாடல்களில் இறைவன் திருவடிச் சிறப்பே பேசப்படுதல் காண்க! இவ்வகை மரபுவழியே சமயப் பெரியோர்களாகிய சம்பந்தர் — அப்பர் — சுந்தரர் — மாணிக்கவாசகர் முதலியோர்களும் வழுத்தக் காணலாம். நால்வர்களும், அவர்கள் வழி மற்ற சமயப் பெரியோர்களும் இறைவனேக் குழந்தையாகக் கண்டு மகிழ்ந்தார்கள்; அழகனுகக் கண்டு அவன் அடிபணிந்தார்கள்; காதலனுகக் கண்டு களிப்படைந் தார்கள்; மாதொரு பாகனுகக் கண்டு மகிழ்ந்தார்கள்; இன்னும் ஞான குருவாகவும், வள்ளலாகவும், தலேவனுகவும், கண்டு இசைத் தமிழாற் போற்றிப் பரவிஞர்கள். மற்றும் மக்களாகிய நாம் வாழ்வதற்கு நம்மைப் படைத்த இறைவனுக்கே பல்லாண்டு பாடியவர்கள் சைவப் பெரியாராகிய சேந்தனுரும், வைணவப் பெரியாராகிய பெரியாழ்வாரும்

ஆவார்கள்; இவ்வாறு கடவுள் வாழ்த்தை அமைத்துக்கொண்ட தமிழர்கள் உலக வரலாற்றுப் புகழ் ஏட்டில் முதன்மை பெற்றனர்.

கடவுள் வாழ்த்தோடல்லாமல் கடவுளோடு ஒப்புடைய இயற்கைப் பொருள்களையும் தொழுது வாழ்த்தத் தொடங்கினர் தமிழர். சிலப்பதிகாரம் படைத்த இளங்கோ அடிகள் கடவுளாகவே இயற்கையைப் போற்றுகின்ருர். திங்களைப் போற்றுகின்ருர்; ஞாயிற்றைத் தொழுகின்ருர்; மழையை வழுத்துகின்ருர்; பூம்புகார் நகரைப் போற்றுகின்ருர். இவ்வாறு பல்வகையில் நலம்புரியும் இயற்கைப் பொருள்களை வாழ்த்துவதின் மூலம் சோழ மன்னனின் அருள் உள்ளத்தையும், ஆட்சிச் சிறப்பையும், கொடைத் தன்மையையும், குடிப் புகழையும் ஒருமித்துப் போற்றுகின்ருர். இவ் வகையில் சோழ நாட்டின் சிறப்பையும், மன்னனின் பெருமையையும் ஒருசேர இயற்கையோடு வாழ்த்தும் மங்கல வாழ்த்துப் பாடல்முறை நம்மைக் கவர்வதாய் அமைந்துள்ளமையும் அறிக!

### புறநிலை வாழ்த்து

பொதுவாக மக்கள் வாழ்க்கையில் பொருட் செல்வத்தைப் பெறுவதும் உண்டு; புகழ்ச் செல்வத்தைப் பெறுவதும் உண்டு; குழந்தைச் செல்வத்தைப் பெறுவதும் உண்டு; தனித்திறமை யால் வெற்றிச் செல்வத்தை அடைவதும் உண்டு. அப்பொழுதெல்லாம் பெரியவர்கள் செல்வச் சிறப்பைப் பெற்றவர்களை நோக்கி இச் சிறப்புக்களை

எல்லாம் இறையருளால் நீ பெற்ருய்; ஆகவே அவன் அருளால் இச் சிறப்புக்கள் குறையாமல் நீடு பொலிந்து வாழ்வாயாக என வாழ்த்திஞர்கள். இவ்வாறு சிறப்புக்குக் காரணம் தெய்வ அருள் என உரைத்துத் தெய்வத்தைப் புறம் நிறுத்தி வாழ்த்துவதைப் புறநிலே வாழ்த்துஎன்ருர்கள். இதனைத் தொல்காப்பியர்

வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலே வாழ்த்தே
(தொல்-பொருள்-செய்-422)

என உரைப்பர். ஒருவன் எவ்வகைச் செல்வம் பெற்றிருந்தாலும் அச் செல்வம் இறையருளால் எய்தியதே என்றும் அவன் காக்க நீ வாழ்க என்றும் கூறும் மரபு இன்றும் வழிவழியாக வருகின்றமையை நாம் உணரலாம்.

மேலும், தெய்வத்தோடு ஒப்ப இயற்கைப் பொருள்களையும் வணங்கி வாழ்த்தினர் தமிழர்கள். அவ்வழி இயற்கைப் பொருள்களையும் சுட்டி அஃதொப்ப நீ நீடு வாழ்வாயாக எனவும் வாழ்த்தத் தொடங்கினர் புலவர் பெருமக்கள். அக்காலத்தே மன்னர்கள் தமிழ் மொழியைப் பெரிதும் போற்றினர். இயற்றமிழ் வல்ல புலவரையும் பாராட்டினர்; இசைத் தமிழ் வல்ல பாணரையும் ஆதரித்தனர்; நாடகத் தமிழ் வல்ல கூத்தரையும் நன்கு போற்றிப் பரிசுகள் பல ஈந்தனர். மன்னர்தம் கொடை மழையால் புலவர்கள் – பாணர்கள் – கூத்தர்கள் இவர்கள்தம்

உள்ளங்கள் குளிர்ந்தன. அவர்களும் குளிர்ந்த தூய உள்ளத்தோடு மன்னர்களை வாழ்த்தினர்கள். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் என்னும் புலவர், குளிர்ந்த சுடரை உடைய திங்களை ஒப்பவும், சுடுகின்ற ஒளி பொருந்திய ஒண்மைக் கதிரை உடைய ஞாயிற்றை ஒப்பவும் நிலைபெற்று வாழ்வாயாக (புறம்: 6) எனவும், அம்மன்னனையே நெட்டிமையார் என்னும் புலவர், நல்ல நீரையுடைய பஃறுளியென்னும் ஆற்றின் மணலினும் பல்காலம் வாழ்வாயாக (புறம்: 9) எனவும், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் என்னும் புலவர், இமயத்துத் தோன்றிய மேகம் பொழிந்த மாமழைத் துளியினும் பலவாகிய காலம் நீ வாழ்வாயாக (புறம்: 34) எனவும் வாழ்த்தினமை காண்க.

## வாயுறை வாழ்த்து

இனிப்பு மருந்து உடலுக்கு நன்மை பயப்பதாகும்; நோயைப் போக்குவதாகும்; உடலை நலத்துடன் வளர்ப்பதாகும். அஃதேபோல் நல்ல அறிவுரைச் சொற்கள் வாழ்வுக்கு நன்மை பயப்பனவாகும். புலவர்கள் மருந்து போன்று நயந்த சொற்களால் அறிவுரை கூறி நல்வழி ஒழுகுமாறு வாழ்த்துதல் வாயுறை வாழ்த்தாகும். இதனைத் தொல்காப்பியர்

"வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்

தாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே."
– (தொல்-பொருள்-செய்-424)

என்பர்.

### அவை அடக்கியல் வாழ்த்து

அறிவுடையோர் பலர் ஒன்று கூடுவர்; அவ் அவையில் அவர்களுக்கு முன்னிலையில் அறிஞர்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துக் கூறுவர். அங்ஙனம் கூறும்பொழுது அவர்கள் மிகப் பணிவோடு கூடிய சொற்களாலேயே தம்மை எளிமைப் படுத்திக் கொண்டு வாழ்த்து மொழிவதே அவையடக்கியல் வாழ்த்தாகும்.

" அவை யடக்கியலே யரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே!"
– (தொல்-பொருள்-செய்-425)

எனத் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாகும்.

### செவியறிவுறூஉ வாழ்த்து

ஒருவன் திறமைகள் பல பெற்றிருக்கலாம்; ஆனால் அத் திறமையின் காரணமாகச் சான்றோர்கள் நடுவில் செருக்கின்றி அவன் பழகவேண்டும்; அவர்களிடையே பணிவான மொழிகளை மொழிந்து அடக்கத்துடன் நடக்கவேண்டும். இவ்வாறு

அடக்கம் முதலான அறங்களைப் பற்றிய மொழிகளை மனத்தில் பதியுமாறு கூறி வாழ்த்துவது செவியறிவுறூஉ வாழ்த்தாகும். இதனை,

"செவியுறை தானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே"
– (தொல்-பொருள்-செய்-426)

எனத் தொல்காப்பியம் கூறும்.

மேலே கண்ட மூவகை வாழ்த்துக்களுக்கும் எடுத்துக்காட்டாக ஒன்றை நாம் பார்ப்போமாக!

சங்ககாலத்தே தமிழகத்தில் மன்னர்கள் சிறந்த நாட்டினைப் பெற்றிருந்தனர்; நிறைந்த செல்வத்தினைப் பெற்றிருந்தனர். இருப்பினும் இவ்விரு சிறப்பும் அறத்தொடு இயைந்து நல்லாட்சியாக மலரவேண்டுமென்று புலவர்கள் எண்ணினர்கள்; அவ்வண்ணமே வாழ்த்தினர்கள். கேவலம் செல்வத்தைக் கண்டு மருண்டார்கள் இல்லை புலவர்கள்; இன்பங்களைக் கண்டு அவற்றுள் மூழ்கினர்கள் இல்லை புலவர்கள்; அரசனது சினத்திற்கும் அஞ்சினர்கள் இல்லை. ஆகவேதான் மன்னன்பால் கண்ட நிறைவினைப் போற்றிய அவர்களே அஞ்சாது மன்னனது குறையினையும் இடித்துரைத்தனர்; நீதிகள் பலவற்றையும் எடுத்து இயம்பினர்; மருந்தினைப் போன்று அறவழியை எடுத்துக்கூறி நல்வழிப்படுத்தினர். அப்புலவர்களுடைய வாழ்த்தும் நிலைத்த வாழ்த்தாயிற்று.

சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரல் இரும்பொறையை நோக்கி நரிவெரூஉத் தலையார் என்னும் புலவர் பேசுகின்றார். "மன்னா நீ நிறைந்த செல்வத்தினை யுடையாய்! வளமை பொருந்திய நாட்டினை யுடையாய்! நீ வளமையும் செல்வமும் ஒரு சேரப் பெற்றிருத்தலினால் ஒன்று உரைப்பேன் கேட்பாயாக! இவ்வுலகத்தே அருளையும் அன்பையும் நீக்கி, பாவஞ் செய்தாரை நீங்காத நரகத்தை இடமாகக் கொள்ளும் கொடுமை உடையவர்கள் உண்டு. அவர்களோடு நீ சேரற்க! அருளொடும் அன்பொடும் குழந்தைகளை வளர்ப் பாரைப் போன்று நீ உன்னுடைய நாட்டு மக்களைப் பேணி வளர்த்துக் காப்பாயாக! அதுதான் அரசர்கள் கடமையாகச் செய்யத் தக்கது; பெறுதற்கரிய செயலுமாகும் என்று கூறி வாழ்த்துகின்றார்."

இப் பாடல் வருமாறு:

எருமை யன்ன கருங்கல் லிடைதோர்
ஆனிற் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும!
நீயோர் ஆகலின் நின்ஒன்று மொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரோடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறல்அருங் குரைத்தே!

(புறம்: 5)

இவ்வாழ்த்தில் புலவர் மன்னனை நோக்கி அருளையும் அன்பையும் நீக்கிக் கொடுமை

உடையவர்களோடு சேராது, அருளும் அன்பும் உடையவர்களோடு சேர்ந்து நாட்டைக் காப்பாயாக! என்று மருந்தினைப் போன்ற உறுதி பயக்கும் மொழி கூறி வாழ்த்தலினால் இப்பாடல் வாயுறை வாழ்த்தாகின்றது. ஒரு தாய் எவ்வாறு குழந்தையைப் பேணிப் பாதுகாப்பாளோ அவ்வாறே நீ உன் நாட்டின் மக்களாகிய செல்வங்களையும் மற்றைய செல்வங்களையும் அன்போடு காப்பாயாக என்று கூறி வாழ்த்துகின்றார் புலவர். இவ்வாறு பொருள் நிறைந்த அறிவுரையைக் கூறி வாழ்த்திய மையால் இப்பாடல் செவியறிவுறூஉ வாழ்த் தாகின்றது. அடுத்து, புலவர், மன்னனை, பெருமை பொருந்திய மன்னவனே என்று விளித்தும், சிறந்த ஒன்றைச் சொல்லுகின்றேன் சற்று அமைதியோடு கேட்பாயாக" என்று கூறியும் தன்னை எளியனாக்கிக் காட்டி மன்னனைப் பெருமைப் படுத்திக் காட்டு கின்றார் புலவர். இவ்வகையில் வாழ்த்துவதனால் இப்பாடல் அவையடக்கியல் வாழ்த்து என்ற பகுதியின் பாற்படும். இவ்வண்ணம் புலவர்கள் ஒருவருடைய நிறையையும் வாழ்த்தினார்கள்; வாழ்த்துவதின் மூலம் அறிவுரை புகட்டி நல்வழி காட்டினார்கள் என்பதையும் அறிகின்றோம்.

### திருமண வாழ்த்து

தமிழர்கள் தங்கள் வாழ்க்கையில் திருமணத்தைப் பெரிதும் போற்றுவார்கள். திருமணம் மனமொத்த காதலர்களை ஒன்று சேர்ப்ப தல்லவா? மேலும் தமிழர்கள் கற்பொழுக்கத்தோடு நெறி பிறழாது வாழும் வாழ்க்கையைத் தொடங்கும்

நாளைத் திருவிழாவாகவே கொண்டாடுவர். திருமண நாளில் மணமகனையும் மணமகளையும் மங்கல மகளிரும், சுற்றத்தார்களும், பெரியவர்களும் தனித் தனியே வாழ்த்துவர். நீரோடு குளிர்ந்த பூக்களையும் நெல்லினையும் கலந்து மணமக்கள் தலையில் தூவி வாழ்த்துவர். இவ்வகை வாழ்த்து திருமண வாழ்த் தாகும். இது திருமண விழாச் சடங்குகளில் ஒன்ருகவே கருதப்படும். இச் சடங்கை மணமிடுதல் என்றும் கும்பிட்டு வாழ்த்துப் பெறுதல் என்றும் கூறுவர். இது நிற்க, வயது வந்த மங்கலப் பெண்டிர்கள் தனித் தனியே ஒவ்வொருவராக மணப்பெண்ணின் முன் நின்று வாழ்த்துக் கூறுவர். இவ்வகைச் சடங்கு மணச் சடங்கு என்றும், பெண்ணழைத்த சடங்கு என்றும் பெயர் பெறும். இச்சடங்கில் மஞ்சள், குங்குமம், திருநீறு முதலிய பொருள்கள் இடம்பெறும். இச் சடங்குகளில் பெண்டிர்கள் மணமகளை நோக்கி, "கற்பொடு நீ வாழ்வாயாக என்றும், பெற்றவர்களுக்கும் மற்ற இல்லத்தார்களுக்கும் இயன்ற நல்லுதவி ஆற்றி வாழ்வாயாக என்றும் கணவனுக்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாக நின்று வாழ்வாயாக" என்றும் கூறி வாழ்த்துவர். இதனை அகநானூற்றில் களிற்றியானை நிரைப் பகுதியில்

"புதல்வற் பயந்த திதலை அவ் வயிற்று
வால்இழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ, நற்பல உதவிப்
பெற்ேறேற் பெட்கும் பிணையை ஆக"–என

நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க!

(அகம்: களி: 86)

என்று நல்லாவூர் கிழார் கூறுவர். இம்முறை தமிழர்கள் எல்லா வகையினரிடத்தும், சிறப்பாகச் செட்டிமார் நாட்டில் நாட்டுக்கோட்டைச் செட்டிமார் திருமணங்களில் திருமணச் சடங்காக இன்றும் நடைபெற்று வருகின்றது. மேற்கண்ட திருமண வாழ்த்தில் —

"தற்காத்துத் தற்கொண்டாற்
பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள்
பெண்"

என்ற திருக்குறள் (56) ஒலிக்கக் காணலாம். இல்லறம் தொடங்கும் மணமக்களுக்கு, ஒழுக்கத்தையும் பண்பையும் எத்துணை ஈடுபாட்டோடு தமிழர்கள் திருமண நன்னாளில் கூறி வாழ்த்துகிருர்கள் என்பது பாராட்டி அறிந்து மகிழத்தக்க தொன்ருகும்.

முடிவுரை

தமிழர்கள்தம் ஆறுவகை வாழ்த்தியலையும் கண்டோம். அவர்கள் எல்லாம் வல்ல முழுமுதல் பொருளை வாழ்த்திஞர்கள்; இயற்கையைப் போற்றி வாழ்த்திஞர்கள்; மக்களின் சிறப்புக்கண்டு பாராட்டி

வாழ்த்தினர்கள்; குறைகண்டால் அதனையும் இடித்துக்கூறி வாழ்த்தினர்கள்; பணிவோடும் தன்னை எளிமையாக்கிக்கொண்டும் வாழ்த்தினர்கள்; மணமக்களை நெஞ்சம் மலர வாழ்த்தினர்கள்; அறியாமை அகற்றி வழிகாட்டும் அறிவுரை புகட்டியும் வாழ்த்தினர்கள். இவ்வண்ணம் அறத்தொடு பொருந்திய தமிழர்கள் தம் வாழ்த்து காலத்தையும் வென்றது. தமிழர்கள்தம் வாழ்த்தும் நிலைத்த வாழ்த்தாயிற்று.



# தமிழ்ப் பழமொழிகள்

தமிழர்கள் சிந்திக்கத் தொடங்கினர்; நாகரிகம் வளர்ந்தது; வாழ்க்கையில் ஈடுபட்ட அவர்கள் வாழ்க்கையின் நிறைகளைக் கண்டார்கள்; குறைகளையும் உணர்ந்தார்கள். இவ்வாறு தாங்கள் பெற்ற அனுபவ உண்மைகளை ஒருவருக்கொருவர் உதவியாகக் கூறிக்கொள்ள முற்பட்டனர். பேராசை கொண்ட மனிதன் பேராசையால் கேடுண்ட நிலையைக் கண்டார்கள். பேராசை குடியைக் கெடுக்கும்; வாழ்வைக் குலைக்கும் என்ற அனுபவத்தைப் பெற்றார்கள். சமயத் துறையில் ஒருசிலர் சமய உண்மைகளை உணர்ந்தனர்; தொழில் துறையில் ஒருசிலர் தொழில் நுட்பங்களை அறிந்தனர்; இன்னும் காதலில், அரசியலில், கல்வியில், இவ்வாறு பல்வேறு துறைகளில் சிறப்பு வாய்ந்த உண்மைகளைக் கண்டறிந்தார்கள். இங்ஙனம் வாழ்க்கையில் பல்வேறு துறைகளில்

சிறப்பு வாய்ந்த உண்மைகளை—அனுபவங்களை ஒருசேரத் தொகுத்துப் பிறர்க்குப் பயன்பெறும் பொருட்டு எளிய மொழியில் கூறத் தொடங்கினார்கள். அவ்வாறு தொகுத்து ஆங்காங்கே மக்கள் கூறத்தொடங்கிய மொழிகள் ஒழுங்கு செய்யப் பட்டனவாய்—பிறர் எடுத்துக் கூறத்தக்கனவாய்—எளிய தன்மை உடையனவாய் அமைந்திருந்தன. அம் மொழியில் தமிழர்களுடைய வாழ்க்கை அனுபவங்கள் பொதிந்திருந்தன; அறவுரைகள் படிந்திருந்தன; வழிகாட்டும் பொருள் மொழிகள் வகுத்துரைக்கப் பெற்றிருந்தன; இயற்கைப் பொருள்களின் தன்மைகள் சுட்டப்பட்டிருந்தன; காலத்தைக் காட்டும் பலதுறைப் பழக்க வழக்கங்கள் கலந்திருந்தன; விலங்கினங்களின் தன்மைகள் விளக்கப் பட்டிருந்தன; நாட்டு மக்களின் நடைமுறைச் செயல்கள் நவிலப்பட்டிருந்தன; இலக்கியச் சொற்கள் இடம் பெற்றிருந்தன. இங்ஙனம் உருப் பெற்ற அம்மொழிகளே பழமொழிகளாகும். இப் பழமொழிகள் மக்கள் ஏடுகளில் எழுதத் தொடங்குவதற்குப் பன்னூருண்டுகளுக்கு முன்னே பிறந்தன. அக்காலத்தில் நினைவாற்றல் மிகுந்திருந்த காரணத்தால் மக்கள் ஒருவருக்கொருவர் இயல்பாக எடுத்தாண்ட பழமொழிகள் மக்கள்தம் நாவையே குடிலாகக் கொண்டு வளரத் தொடங்கின. எத்தனையோ தலைமுறை தலைமுறையாக ஆங்காங்கே வளர்ந்த இப் பழமொழிகளைப் படித்தறியாப் பாமரர்களும் கூறத் தொடங்கினர்கள்; பெரியோர்கள் சிறுவர்களுக்கு அறிவுரை கூறும் பொருட்டு மேற்கோளாக எடுத்துக்கூறத் தொடங்கினர்கள்; சான்றோர்கள் மற்றவர்களுக்கு இன்ப

துன்ப இயல்புகளைக் கூறும்பொருட்டும் கையாண்டார்கள். மாமரத்தின் வளமையை மாம்பழத்தில் நாம் காண்பதுபோல் மக்களின் வாழ்க்கை அனுபவத்தை–அறிவை–மொழி வளத்தை நாம் பழமொழிகளில் காணலாம். பழமொழிகள் காலத்தோடு ஒட்டி உருவாயின; காலத்தோடு ஒட்டியவை நிலைத்தன; ஒட்டாதவை மறைந்தன. மக்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துப் பிறர்க்குக் கூற முற்படும் பொழுது, அக் கருத்துக்களை விளக்க உதவின; தோழன் போல் நின்று துறைதொறும் அறிவளித்தன. இங்ஙனம் வளர்ந்து செம்மை வாய்ந்த பழமொழியைப் புலவர் பெருமக்கள் போற்றினார்கள். இதற்கு இலக்கணமும் வகுக்கத் தொடங்கினார்கள். இப் பழமொழிகள் சொற்கட்டு உடையனவாயுள்ளன என்றனர்; கூர்மை முறையில் ஒளியூட்டும் கருத்தைக் குறிப்பனவாயுள்ளன என்றும் உரைத்தனர்; எளிமையும் அதுபோழ்தே ஆழ்ந்த கருத்தும் செறிந்திருந்தன என்றும் அறிவித்தனர். மேலும் அவை நடைமுறையில் தாம் கூறவந்த பொருளை வெளிப்படுத்தி முடிக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தன என்றும் இலக்கணம் பகர்ந்தனர். இதனைப் பெரும் புலவராகிய தொல்காப்பியர்,

''நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி யென்ப''

(தொல்-பொருள்-செய்: 489)

என்று கூறி இப் பழமொழியை முதுமொழி என்ற பெயரால் உரைத்தனர். சைவ குருவாகிய மாணிக்கவாசகர் ''பழஞ்சொல்'' என்று பகர்ந்தனர். இதன் ஆற்றலைக் கண்ட புலவர் பெருமக்கள் தங்கள் தங்கள் பாடல்களில் அமைத்துப் பாடத் தொடங்கினர்; கருத்துக்களை விளக்க எடுத்துக் கொண்ட அப் பழமொழிகளைத் தங்கள் திறத்தால் மேலும் சுவைப்பொருளாக்கினர் புலவர் பெரு மக்கள். இங்ஙனம் புலவர் பெருமக்களால் சுவையுடன் விளக்கப்பட்ட பழமொழிகள் ஆயிரம் ஆயிரம்! சங்கத் தமிழ் நூல்களிலும்—நீதித் தமிழ் நூல்களிலும்— சமயத் தமிழ் நூல்களிலும் எங்ஙனம் புலவர் பெருமக்கள் இப் பழமொழிகளை வைத்துப் போற்றினர் என்பதை நாம் ஆராய்வோமாக!

## சங்கத் தமிழ் நூல்

"கிளியீடு வாய்த்தாற் போல்வது"—என்பது ஒரு பழமொழியாகும். ஒரு மரப் பொந்தில் கிளிகள் தாங்கள் முயன்று நெற்கதிர்களைக் கொண்டுவந்து சேர்த்துவைக்கும்; அங்ஙனம் கிளியினால் சேர்க்கப் பெற்ற நெற்கதிர்கள் ஒருசேர ஒரே இடத்தில் நமக்குக் கிடைப்பது ஒரு வள்ளலுடைய செல்வம் கிடைப்பது போன்றதல்லவா! இப் பழமொழியை மிக அருமையாகப் புறநானூற்றில் மருதன் இள நாகனார் என்ற புலவர் தம்பாடலில் அமைத்துக் காட்டுகின்றார். இப்பொழுது நாகர்கோயில் என வழங்கும் பகுதியே நாஞ்சில் நாடாகும். இதனை நாஞ்சில் வள்ளுவன் என்ற சிற்றரசன் சேர அரசுக்கு உட்பட்டு ஆண்டு வந்தான்.

இவ்வரசனைக் கண்டு பரிசில் பல பெற்ருர் புலவர். அவனது வள்ளல் தன்மை அவர் உள்ளத்தைப் பெரிதும் ஆட்கொண்டது. இந்த நினைவோடு அவனது நாட்டைவிட்டு அகன்ருர்: வரும்வழியில் பாணர் ஒருவனைக் கண்டார்; அப்பாணன் புலவரிடம் நாஞ்சில் வள்ளுவனைக் காணச் செல்வதாகக் கூறினன். உடனே மகிழ்ந்த புலவர் பாணனை நோக்கி, "பாண! நீ நல்ல எண்ணம் உடையாய்; நீ காணச் செல்லும் தலைவன் இன்றுபோய்ப் பிறிதொருநாள் வருவாயாக என்று சொல்பவன் அல்லன்; அவன் சிறந்த வள்ளல்; கிளிகள் நிறைந்து வாழும் பெரிய வனத்தகத்தே வளர்ந்தோங்கிய மரப்பொந்தில், அக்கிளிகளால் சேர்த்து வைக்கப்பெற்ற நெற் கதிர்கள் ஒருசேர நமக்குக் கிடைப்பது போன்ற தன்மை உடையவன் அவ்வள்ளல் என்று கூறுகின்ருர் புலவர். இதனை,

"ஒலியிருங் கதுப்பின் ஆயிழை கணவன்
கிளிமரீஇய வியன் புனத்து
மரனணி பெருங்குரல் அனையன் ஆதலின்"

– புறம் : 138.

என்று அவன் வள்ளல் தன்மையைப் புகழ்வர் புலவர். மேலும் சிற்றரசனுகிய நாஞ்சில் வள்ளுவனை அன்புடையவன் - ஒப்புரவுடையவன் - யார்வரினும் இல்லையென்னுது, அவர்கள் வேறு வள்ளலைக் காணச் செல்லாதவாறு அவர்கள் தம் வறுமையைப் போக்கிப் பெரிதும் ஈயும் பண்பினன் என்றெல்லாம் சொல்ல வந்த புலவர் அவர்தம் பாடலில் இப்பழ

மொழியை அமைத்துக் கையாளுவதின் மூலம் தம்முடைய மனக்கருத்தையெல்லாம் நமக்குத் தெளிவாக்கியுள்ளார். இவ்வாறு தான் கருதிய கருத்தைப் பிறர்க்கு எளிதில் விளக்குந் தன்மை வாய்ந்த இப் பழமொழியைப் புலவர் ஈண்டு எடுத்தாளுவது போற்றத்தக்க தொன்ருகும்.

"கிளியிடு வாய்த்தாற் போல்வது" – என்ற பழமொழியை மக்கள் வழங்கியவாறே தாராது இலக்கிய நயந்தோன்ற புலவர்,

'கிளிமரீஇய வியன் புனத்து
மரனணி பெருங்குரல் அனையன்'

என மொழிவது மேலும் அப்பழமொழித் தொடரைச் சுவையுடையதாக்குகின்றது. இம்முறையில் பழமொழிகள் பலவற்றைச் சங்க நூலாசிரியர்கள் பலரும் இலக்கியம் கனிய ஆக்கித்தந்துள்ளனர்.

### நீதித் தமிழ் நூல்

"உள்ளம் படர்ந்ததே கூறும்முகம்"

என்பது பழமொழியாகும். ஒருமனிதன் இன்ப உணர்ச்சியையோ, துன்ப உணர்ச்சியையோ, கள்ள உணர்ச்சியையோ பிறர் அறியாவண்ணம் மறைக்க முற்படலாம்: ஆனல் அவன் உள்ளத்தில் மறைந் தொழுகும் அவ்வுணர்வுகளை அவனது முகமே காட்டிக்கொடுத்துவிடும். பொதுவாகப் பெரியநீதி மன்றமாகத் திகழுவது மனிதர்களுடைய நெஞ்சமாகும். அறத்திற்கும் நீதிக்கும் மாறுபட்டு அம்

மனிதன் செல்லும் பொழுது மனித மனமே திருத்த முயல்கின்றது; அறிவைப் புகட்ட முற்படுகின்றது; உண்மை வழியை அதுவே காட்டி நிற்கின்றது; அதனுல்தான் உண்மை கொலுவிருக்குமிடம் மனிதர்களுடைய உள்ளங்களே! என்று ஆன்ருேர் கூறினர் போலும்! ஆனுல் மனிதன் உண்மைக்கு மாறுபட்டு நிற்கும்பொழுது அவனுள் எழும் உணர்ச்சிகளை முகத்தின் வாயிலாக, அவனது நெஞ்சமே காட்டிவிடுகின்றது என்ற பேருண்மையைப் பழமொழிவாயிலாகக் கூறினர் தமிழர்கள். இத்தகைய பழமொழிகளை—அவற்றின் உட்பொருளைப் பெரிதும் ஆராய்ந்து வியப்புற்ற புலவர் முன்றுறையரையனுர் ஆவார்; அவர் தாம் சுவைத்துப் போற்றிய பழமொழிகளில் நானூற்றைத் தொகுத்தார்; அப்பழமொழிகளுக்கு விளக்கம்தர வேண்டிப் "பழமொழி நானூறு" – என்ற வெண்பா நூலை ஆக்கித்தந்தார். ஒவ்வொரு சிறந்த கருத்தை உள்ளடக்கிய ஒவ்வொரு பழமொழிக்கும் அக்கருத்திற்கேற்ற வண்ணம் சிறந்த வெண்பாவை ஆக்கித்தந்த பெருமை அவரையேசாரும். "உள்ளம் படர்ந்ததே கூறும் முகம்" என்ற பழமொழிக்கு அவர் தரும் விளக்கம் காண்போம். காட்டாற்றில் வெள்ளம் வருதலை உணர்த்த, வெள்ளம் வருவதற்குச் சிறிது நாழிகை முன்னமேயே காய்ந்திருந்த மணல்கள் ஈரமுடையனவாய் மாறும்; ஈரமுடையனவாக மாறிய அம்மணலைக்கொண்டே வெள்ளத்தின் வருகையை நாம் உணரலாம். அஃதேபோல் வஞ்சக எண்ணத்தை நெஞ்சகத்தே மறைத்து நின்ருலும் அவர்கள் தம் முகமே அதனைக்காட்டி விடும் என்று கூறுகின்ருர். இதனை,

வெள்ளம் வருங்காலே
ஈரம்பட் டஃதேபோல்
கள்ள முடையாரைக்
கண்டே அறியலாம்
ஒள்ளமர் கண்ணாய்!
ஒளிப்பினும் உள்ளம்
படர்ந்ததே கூறும் முகம்!

—பழமொழி நானூறு : 144

என்று முன்றுறையரையனார்தம் வெண்பாவால் பழமொழிக் கருத்தின் ஆழத்தையும் அதன் நுண்மையையும் உணரலாம். இவ்வாறே திருக்குறள் முதலாக உள்ள பதினெண்கீழ்க் கணக்கு நூல்களைச் சார்ந்த நீதி நூல்கள் அனைத்தும் பழமொழியைப் போற்றிப் புகழ்ந்திருத்தலை நாம் அறியலாம். பின் எழுந்த சிற்றிலக்கியங்களிலே சதக இலக்கியங்கள் பல உண்டு. அவ்விலக்கியங்கள் அனைத்தும் பழமொழிகளை வைத்து நீதியைப் புகட்டும் நோக்கத்தோடே தோன்றின. "தண்டலையார் சதகம்" — நூறு பாடல்களிலும் நூறு பழமொழிகளை வைத்து நீதிவடிவாக்கிக் காட்டுகின்றார் அதன் ஆசிரியர் படிக்காசுப் புலவர். அந்நூலில்,

"எட்டிபழுத்தால் என்?
ஈயாதார் வாழ்ந்தால் என்?"—என்றும்

"எய்தவன் இருக்க
அம்பைநோவது ஏன்?" என்றும்

"மழைவிட்டும் தூவானம்
விடவில்லை!" - என்றும்

வரும் பழமொழிகள் பல எடுத்தாளப்பெற்றிருத்தலையும் நாம் காணலாம்.

சமயத் தமிழ்.

"கனியிருக்கக் காய்கவர்வ துண்டா!"– என்பது பழமொழியாகும். மரத்திலே நல்ல பழுத்த பழம் இருக்க, அதனைவிடுத்துப் பழுக்காத காய்களை யாராவது விரும்பிப் பறிப்பார்களா? என்பது இதன் கருத்தாகும். சமணமயம் செல்வாக்குப் பெற்றிருந்த காலம். அப்பர் பெருமான் சமணர்களுடைய சொல்லாற்றலில் மயங்கினர்; சமண சமயத்தை மேற்கொண்டார்: அப்பொழுது அப்பர் பெருமானைச் சூலை நோய்பற்றிக் கொண்டது: தமக்கை திலகவதியார் வழிகாட்டச் சமணசமயத்தை விடுத்துச் சைவ சமயத்தை மேற்கொண்டார். சிவனருள் ஆட்கொண்டது; அறியாமை விலகிற்று; அருட் செல்வத்தை வாரி வழங்கினர்; இவ்வாறு தெளிந்த அப்பர் பெருமான் அருட்கனியாகிய சைவ சமயத்தை மேற்கொள்ளாது, பழுக்காத காய் போன்ற சமண சமயத்தை மேற்கொண்டு அலைந்தேனே என்று வருந்திப்பாடுகின்றார். இதனைத் திருவாரூர்த் திருப்பதிகத்தில் -

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த
மேனியான் தாள்தொ ழாதே
உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி
உழிதந்தென் உள்ளம் விட்டுக்

கொய்புலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ
மயிலாலும் ஆரூ ராரைக்
கையினல் தொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேனே!

(தி: 4: ப: 5: பா: 1)

என்று கூறுகின்ருர்; இப்பாடலில் சமணசமயத்தை வெறுத்துச் சைவசமயத்தை விரும்பும் அப்பர்தம் திருவுள்ளத்தை - மேலே கண்ட பழமொழி மிக அருமையாக விளக்கிநிற்க நாம் காணலாம். உள்ளக் கருத்துக்களைத் தெள்ளத்தெளிய விளக்குந் தன்மையைப் பெற்ற பழமொழிகளை அப்பர் மிகவும் அருமையாகப் போற்றுகின்ருர். திருவாரூர்ப் பதிகப் பாடல் பத்திலும் பத்துப் பழமொழிகளை அப்பர் வைத்துப்பாடும் அழகே அழகு! மேலும் சமயத்தைப் பரப்ப எழுந்த பன்னிரு திருமுறை களிலும், அவ்வத்திருமுறை ஆசிரியர்களும் பழ மொழிகளைப் போற்றி அவைகளை அருள் கனிந்த மொழிகளாக ஆக்கித் தந்திருப்பது தமிழர்கள் பெருமைப்படக்கூடிய தொன்ருகும்.

மற்றும் ஆழ்வார்கள் மொழிகளிலும், புராணங் களிலும் பின் எழுந்த சிற்றிலக்கியங்களிலும், பழமொழிகள் ஆட்சிசெய்து கொலு வீற்றிருப்பதைப் பார்த்தால் அவற்றின் ஆற்றல் அளவிடற்கரியது என்பது புலனகும்.

முடிவுரை

இதுகாறும் சங்கத்தமிழ் நூல்களிலும்-நீதித் தமிழ் நூல்களிலும் - சமயத் தமிழ் நூல்களிலும் புலவர்கள் எங்ஙனம் பழமொழிகளைப் போற்றித் தந்தனர் என்பதை ஒருவாறு கண்டறிந்தோம். பழமொழிகள் நுண்மைவாய்ந்தன என்பதையும் எளிமை வாய்ந்தன என்பதையும் சொற்கட்டாயும் அதுபோழ்தே ஆழ்ந்த கருத்துக்கள் செறிந்தன வாயும் அமைந்துள்ளன என்பதையும், உள்ளக் கருத்தை உறுதியோடு தெளிவாகக் காட்டும் உண்மைக் கருவியாவன என்பதையும் புலவர் பெருமக்கள் நமக்கு எடுத்துக்காட்டினர்கள். உண்மையில் இப்பழமொழிகள் கருத்துக்களை விளக்கும் கருவிகளாகவே அமைந்தன போலும்! ஏனெனில் பழமொழிகள் இயற்கையில் மக்களின் வாழ்க்கையில் பிறந்தவை; அம்மக்களாலேயே வளர்ந்தவை: மேலும் அம்மக்களால் வளர்ந்த நன்றிக்காக அம் மக்களையே உயர்த்தி அறிவூட்டும் அறமொழி யாகவும் திகழ்பவை; இங்ஙனம் தமிழ் மக்களுக்குக் கைவிளக்காய் தமிழ்ப் புலவர்களுக்குக் கலை விளக்காய் நின்று வழிகாட்டும் தமிழ்ப்பழமொழிகள் போற்றுவதற்குரிய அறிவுக் களஞ்சியங்களாகும்!



# விடுகவிகள்

தமிழர்களுடைய வாழ்வு வளம்பெற்றது. தமிழர்தம் நெஞ்சங்கள் நிறைந்தன. அவர்கள் தங்கள் கருத்துக்களைப் பிறருக்குத் தெளிவாகக் கூறத்தொடங்கினர்; அதற்குத் துணையாக மொழி களில் எளிமையைக் கையாண்டனர்; சொற்களைப் புதியனவாக வாழ்க்கைக்கு வேண்டிய வண்ணம் ஆக்கிக்கொண்டனர்; அச்சொற்களை அழகுறவும் மொழியத் தொடங்கினர்; மனித சமுதாயத்தில் ஒருசிலர் அழகுறப் பேசியவற்றைப் படித்தவர்களும் பாராட்டினர்; பாமரரும் பாராட்டினர். அவ்வாறு பாராட்டப் பெற்றவர்கள் மகிழ்ந்து மேலும் தங்கள் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொண்டனர். அவர்கள்தம் கற்பனை விரிந்தது; அவர்கள் தாங்கள் வெளியிடும் சொற்களிலே தங்களுடைய கற்பனையைக் காட்டினார்கள். தாங்கள் எண்ணிய கருத்துக்களை உவமைகாட்டிக் கற்பனையோடு

பேசும்பொழுது மற்றவர்கள் மிகவும் அனுபவித்துப் பாராட்டினுர்கள். கேட்டவர்கள் அறிவும் வளரத் தொடங்கிற்று. மக்களுடைய இலக்கிய உணர்வும் மலர்ந்து பரவியது. இவ்வாறு சொற்களிலே அழகுணர்ச்சியும் கற்பனையும் கலக்கவே தமிழ்மொழி மேலும் இலக்கிய வளமையைப் பெற்றது. மலை யிலிருந்து விழும் அருவியைக் கண்டான் தமிழன்; காட்டில் தானே மலர்ந்து மணக்கும் முல்லையை முகர்ந்தான் தமிழன்; மகிழ்ச்சியில் தோகையை விரித்தாடும் மயிலினது ஆட்டத்தை அனுபவித் தான் தமிழன்; மங்கையின் பார்வையில் மட்டில்லாத இன்பத்தைத் துய்த்தான் தமிழன்; இவ்வாறு இயற்கையில் தோய்ந்த தமிழனது அறிவு தான் எண்ணியவற்றை அழகுறச் சொல்லுவதற்குக் கற்பனையைக் கருவியாக்கத் தொடங்கிற்று. பனியும் தென்றலும் மறைவாக மலரை வளர்ப்பது போன்று இவ்வியற்கையில் உதித்த கற்பனை மனிதனது எண்ணங்களை வளர்த்தது. அவ்வெண்ணங்களுக்கு வடிவினை வழங்கியது; அவ்வெண்ணங்களைப் பிறர் மனத்தில் படியச் செய்ய வழிமுறைகளை வகுக்கத் தொடங்கியது; இவ்வாறு கற்பனையறிவால் வளர்ந்த தமிழன் அறிவு வளம்பெறப் புதிர்களைப் போடத் தொடங்கினுன். அப்புதிர்களை விடுவிக்குமாறு பிறரைக் கேட்டான். அக்காலத்தே வீட்டிற்குள் நடுவில் முற்றம் அமைத்து வீடுகட்டுவார்கள். அறைவீடுகள் சுற்றியிருக்க நடுவில் முற்றம் இருக்கும். இதனை அறிந்தான் மனிதன். தன் விரல்களோடு கூடிய உள்ளங்கையை அதற்கு ஒப்புமை கண்டான். முற்றமும்—உள்ளங்கையும் ஒருவகைக் கற்பனையைத் தோற்றுவித்தன. அக்

கற்பனை அவனுள்ளத்தே ஒரு புதிராக வடிவெடுத்தது. உடனே அவன், "ஐந்து வீட்டுக்கு ஒரு முற்றம் அது என்ன!" என்று புதிரைப் போட்டான்; அதற்கு விடைகூற மற்றவன் சிந்தித்தான். அறை வீடுகளுக்கு நடுவில் அமைந்திருப்பது முற்றம். அதுபோல் ஐந்து விரல்களுக்கும் நடுவில் அமையப் பெற்றிருப்பது உள்ளங்கையாகும். ஆகவே உள்ளங்கை என்று அப்புதிரை விடுவித்தான். இவ்வாறு ஒருவருக்கொருவர் பொழுது போக்காகத்தொடங்கிய புதிர்மொழி கவிநயம் தோய்ந்ததாயிருந்தது; கற்பனை செறிந்ததாய் இருந்தது; அறிவையும் வளர்ப்பதாயிருந்தது; அப்புதிர்மொழியை மிகவும் பாராட்டித் தமிழினம் இலக்கியமாக வளர்க்கத் தொடங்கிற்று; அவ்விலக்கியப் புதிர்மொழிகளே விடுகவிகள் என்ற பெயரினையும் பெற்றது.

இவ்வாறு பிறந்த விடுகவிகள் ஆயிரம் ஆயிரமாகப் பெருகின. இவ்விடுகவிகளின் எளிமைத் தன்மை புலவர்களின் உள்ளத்தையும் ஈர்த்தது; உவமைகளைக் கூறிப் பொருளை மறைத்துப் பேசும் தன்மையும் அவர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது; அங்ஙனம் கொள்ளை கொண்ட விடுகவிக்கு இலக்கணம் வகுக்கத் தொடங்கினர் புலவர் பெருமக்கள். அவ்விடு கவியைப் "பிசி"—என்ற பெயரால் அழைக்கத் தொடங்கினர்; அதனை இரண்டு வகையாகப் பிரித்தனர். " தான் கூறவந்த பொருளை மறைத்து அப்பொருளுக்கு ஒப்புமையான வேறொரு பொருளை வெளிப்படையாகக் கூறித் தான் கருதியபொருளைக்

கேட்டல்" ஒருவகையாகும். "தான் கூறவந்த ஒரு பொருளை மறைத்து, தெளிவாக அதன் கருத்து வெளிப்படுமாறு வேருெரு பொருளைக் காட்டிப் பேசுவது மற்ருெரு வகையாகும். இதனைத் தொல்காப்பியர்,

"ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோற்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிவகை நிலையே"
(தொல்-பொருள்-செய்-488)

என்று விடுகவிக்கு இலக்கணம் கூறியுள்ளார்.

மேலேகண்ட இருவகை இலக்கணத்திற்கும் எடுத்துக் காட்டுக்களை நாம் பார்ப்போமாக! மக்கள் அன்ருட வாழ்க்கையிலே காணும் பொருள்களில் சுண்ணும்பு ஒன்ருகும். பெரியவர்கள் வெற்றிலைப் பாக்கோடு சேர்த்துச் சுவைக்கும் பொருளுமாகும். இச்சுண்ணும்பைப் புதிர்ப்பொருளாக்க முனை கின்ருர் ஒருவர். அவர் போடும் விடுகவி—

"வேகாத வெய்யிலிலே
வெண்ணெய் பிசைந்து வைத்தேன்
உருகவில்லை ஒட்ட வில்லை
உலர்ந்து விட்டது!"

இதற்குச் சுண்ணும்பு என்று மற்றவர் விடுவிக் கின்ருர். இதில் வெண்ணெய் உருகும் தன்மையது; வெய்யில் பட்டவுடன் உருகி ஓடும்;

ஆனல் வெண்ணெய் போன்று வெண்மையில் ஒப்புமை உடையது சுண்ணும்பு; சுண்ணும்புக்கு ஒப்புமைப் பொருளாக வெண்ணெயைக் கூறு கின்ருர்: பின் வெண்ணெயின் உருகுந்தன்மையை எடுத்துக்கூறி உருகாத தன்மை வாய்ந்த சுண்ணும்பை மறைத்து வைத்துப் புதிர் என்ன என்று கேட்கிருர். ஒப்புமையுடைய வெண்ணெயை எடுத்துக்கூறித் தான் கருதிய பொருளாகிய சுண்ணும்பை, மறைத்துக் கூறியதனுல் இவ்விடுகவி "ஒப்பொடு புணர்ந்த உவமை" என்ற முதல் வகையைச் சார்ந்ததாகும். இவ்வகை விடுகவிகள் புலவர்கள் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன எனலாம். சங்க கால இலக்கியங்களிலும், பிற் காலத்தே எழுந்த சிற்றிலக்கியங்களிலும், சிலேடைச் செய்யுள்களிலும் உவமைப் பொருள் செறிந்த இவ்விடுகவி வகையினை நாம் அறிந்து இன்புறலாம். இவ்வகையில் அமைந்த பாவடிகள் கருத்துச் செறிந்தனவாய்க் கலைபடிந்த உண்மை களைக் காட்டுவனவாய் அமைந்திருக்கும். மேலும் தலைவனைப் பிரிந்து தலைவி வாடுங் காலத்து, செவிலித் தாய்மார் விடுகவி போட்டுப் பொழுது போக்குவர். இவ்வாறு விடுகவியைச் செவிலிக்கு உரிமையாக்கி இலக்கியம் படைத்தனர் புலவர் பெருமக்கள்.

அடுத்து மற்றவகையைப் பார்ப்போம். தமிழகத்தில் கற்களால் ஒளி உண்டாக்கிய காலம் கடந்துவிட்டது; திரி அமைத்து எண்ணெய் ஊற்றி விளக்கேற்றி ஒளிகண்டனர் மக்கள்; அதன்பின் அயலார் தமிழகத்துக்கு வந்தனர்; அவர்கள்

கூட்டுறவால் மெழுகுதிரி விளக்கும் வந்தது. அவ்விளக்கு எரியும்பொழுது மெழுகு உருகும்; உருகி உருகி மெழுகு முழுவதும் கரைய அவ்விளக்கு ஒளிதந்து பின்மறையும். இதனைக் கண்டு சிந்தித்தார் ஒருவர். இதன் கருத்தை உள்ளடக்கிக் கொண்டு விடுகவி ஒன்றைப் போடுகின்ருர்:—

" எண்ணெய் வேண்டாத விளக்கு
எடுப்பார் கைவிளக்கு
கண்ணீர் விட்டுக் கலங்கிடும் விளக்கு
தன்னைத் தானே விழுங்கிடும் விளக்கு !"

அதற்கு மெழுகுதிரி விளக்கு என்று புதிரை விடுவித்தார் மற்ருெருவர். இவ் விடுகவியில் அமைந்திருக்கும் புதிரைப் பாருங்கள். எண்ணெய் ஊற்றும் திரிவிளக்கைக் கண்ட மக்களுக்கு—அவ் விளக்கின் மற்றைய தன்மையை உணர்ந்த மக்களுக்கு-வேருெரு விளக்கின் தன்மையைக் கூறுகின்ருர். தான் கருதியது மெழுகுதிரி விளக்கு என்பதைத் தெளிவாய்ப் புலப்படுமாறு கூறுகிருர். எரிகின்ற விளக்கு எண்ணெயின்றி எரிகின்றது என்பதாலும், தானே உருகுவதைக் கண்ணீர் விடுகின்றது என்று கூறிய கற்பனையாலும், தன்னைத் தானே எரிபொருளாகக் கொள்கின்றது என்ற அதன் செயலினுலும் மெழுகுதிரி விளக்கு என்பது வெளிப்படையாகத் தெரிகின்றதல்லவா? இதனுல் இவ்விடுகவி "தோற்றுவது கிளந்த துணிவினும்"— என்ற இரண்டாம் வகையைச் சார்ந்தது. இவ்வகை விடுகவிகளை, மக்களுக்கு

அறிவுரை பகரும்பொழுது புலவர்கள் இலக்கியங்களில் எடுத்தாண்டனர். காப்பியங்களிலும் நீதி இலக்கியங்களிலும் இவ்வகை விடுகவிகளின் தன்மை படிந்திருப்பதை நாம் கண்டு அறிவின்பம் பெறலாம்.

பொதுவாக மக்கள் இவ்விருவகையும் படிந்த விடுகவிகளுக்கு, தாவரம்—மலை—ஆறு—மலர்கள் முதலிய இயற்கைப் பொருள்களையும் புதிராகக் கையாண்டனர்; சமயத்துறையில் பாடல் பெற்ற தலங்களின் பெயர்களையும் எடுத்தாண்டனர்; அஃறிணைப் பொருள்களாகிய ஊர்திகள் - இசைக் கருவிகள்—நுண்கலைப் பொருள்கள் முதலியவற்றையும் விடுகவிகளில் இடம்பெறச் செய்தனர்; மேலும் நாள்தோறும் பழகும் விலங்கினங்களையும் மனிதர்களின் உடல் உறுப்புக்களின் பெயர்களையும் வைத்து விடுகவிகளை யாத்தனர். இவ்வாறு விடுகவிகள் மக்கள் சமுதாயத்தில் அன்றுடம் அவர்கள் வாழ்க்கையில் காணுகின்ற பொருள்களைப் பற்றியும் அவற்றின் தன்மைகளைப் பற்றியும் அறிவித்தன; மக்களின் சிந்தனையைத் தூண்டின; கற்பனையை உயர்த்தின; அறிவைப் பெருக்கும் ஆற்றல் வாய்ந்த கருவிகளாய் அமைந்தன; தமிழ் இலக்கியங்களுக்கும் தமிழ்க் கவிதைகளுக்கும் அடிப்படைக் கருவூலமாயும் நிலைத்தன எனலாம்.



# பொருள்மொழிகள்

நாம் நாள்தோறும் செய்தித் தாள்களைப் படிக்கின்றோம். அவை உலகில் பலஇடங்களில் நிகழும் குடும்பச் சண்டைகளையும் நாட்டின் பலவிதத் தகராறுகளையும் தருகின்றன; குழப்பம் நிறைந்த வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் கூறுகின்றன; மக்கள் பொறுமை இழந்துவாடும் நிலையையும், வறுமையால் துன்புறும் நிலையையும் எடுத்துரைக்கின்றன; மக்கள் அமைதி இழந்து அவதியுறும் நிலையைச் சுட்டுகின்றன; மக்கள் சமுதாயம் உயிர்வாழ்ந்து பேறுபல பெறுவதற்குப் பதிலாக அழிவை நோக்கிச் செல்லும் நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கின்றன. உலகில் நடக்கும் இத்தகைய நிகழ்ச்சிகளைப் படிப்பதனால் அந்நிகழ்ச்சிகள் நமக்கு வெறுப்பை விளைவிக்கின்றன; சினத்தை எழுப்புகின்றன; இன்னும் இதுபோன்ற உணர்ச்சிகளைத் தூண்டக் காண்கின்றோம். இவ்வுணர்ச்சிகள் நமக்குப் பயன்

தருகின்றனவா என்று நாம் சிந்தித்துப் பார்த்தால், உண்மையில் அவ்வுணர்ச்சிகள் நம்மைக் கடைத் தேற்றுவதற்குப் பதிலாக நம்மைக்கீழே வீழ்த்தக் காணுகின்றோம். அவை நம் உள்ளத்தில் அன்பைப் போக்குகின்றன; அறிவை மழுங்கச் செய்கின்றன; அமைதியை அறவே அகற்றுகின்றன; ஆனால் அதே செய்தித்தாளில் வேறொரு இடத்தில் மகாத்மா காந்தியடிகள் போன்ற மாமுனிவர்களின் பொன்மொழிகளையும் பார்க்கின்றோம். அம்மொழிகள் படிக்கும் பொழுதே நம்மைத் தன்வயப்படுத்துகின்றன. அம்மொழிகளில் ஒன்றை நாம் பார்ப்போம். அவர் மனித உள்ளங்களின் பண்பை உணர்ந்து பேசுகின்றார். தாம் கண்டறிந்த உண்மையைப் பிறரும் ஏற்கும் வண்ணம் தெளிவாகவும் உறுதியாகவும் எடுத்துரைக்கின்றார்.

"பிணைப்பினால்தான் உலகத்தில் உயிர் நிலைத்து வருகிறது. பரஸ்பர அன்பினாலேதான் உலகம்நடை பெற்றுவருகிறது.

ஒருவரை ஒருவர் காத்து வருவதாலேதான் சமூகங்கள் நிலைத்து நிற்கின்றன. ஒரு தேசத்து மக்கள் ஒருவரை ஒருவர் மதித்து ஒருவருக்கொருவர் உதவியும் வந்து, சமூக வாழ்க்கையைக் காப்பாற்றி வருவதைப் போல் பிரபஞ்சம் முழுவதற்கும் அந்த அன்பு முறையை விஸ்தரித்துப் பெருக்கவேண்டும். குடும்பப் பிணைப்பைத் தேசத்துக்கும் சமூகத்துக்கும் விஸ்தரித்திருக்கிறோம். சமூகப் பிணைப்பை

உலகளவு விஸ்தரிக்க வேண்டும். உலகம் முழுதும் ஒரு பெரியகுடும்பம் ஆகவேண்டும்."

– யங் இந்தியா : 2–3–22,

(ரகுபதிராகவ; தமிழாக்கம்–இராஜாஜி)

"ஆண்டவன் நியதியை அமைப்பவன். அவனே நியதி. அவனே அதை நிறைவேற்றுபவன். இவ்வளவும் ஒரு தனிமனிதன் வகிக்கமுடியாதல்லவா?"

–ஹரிஜன் : 24–2–46

(ரகுபதிராகவ; தமிழாக்கம்–இராஜாஜி.)

என்று கூறுகின்ற பொன்மொழிகளைப் படிக்கின்ருேம். அம்மொழிகள், நமக்கு உலக ஒருமைப்பாட்டை விளக்குகின்றன; அன்பின் ஆற்றலை அறிவிக்கின்றன; வீட்டுறவையும் நாட்டுறவையும் வேறின்றிப் பிணைக்கின்றன; இறைவன் உலக இயல்பை ஏற்படுத்துபவன் என்றும், அவ்வுலக இயல்பாகி நன்மையையும் தீமையையும் அவனே ஆற்றுகின்ருன் என்றும் உணர்த்துகின்றன.

இவ்வகையில் அவை நம் உள்ளத்தில் அமைதியை ஏற்படுத்தி அறிவைத் தெளிவிக்கின்றன; நம் உள்ளத்திலுள்ள வெறுப்புணர்ச்சியைப் போக்கி அன்பு நிறைந்த காப்புணர்ச்சிகளை வளர்க்கின்றன. இவ்வாறு அமைதியை உள்ளத்தே பிறப்பிக்கும் எழுத்தே–சொல்லே–மொழியே–பொருளே –நிலைத்து நின்று மனித சமுதாயத்திற்கு நன்மையை விளைவிக்கும். பொதுவாக ஒருசில சொற்கள் சில சமயங்களில்தான் பயன்படும்; சிலகாலம் வரை

யில்தான் ஒளிவிடும்; பின் அழிந்துபடும். ஆனுல் விருப்பு வெறுப்பின்றித் தெளிந்தநிலையில் நிறைந்த உள்ளத்திலிருந்து வெளிப்பட்ட மொழிகள் அழியாது எக்காலத்தும் நிலைத்து நிற்கும்; காலத்தையும் வென்று நிற்கும்; மனித சமுதாயத்திற்கு உயிரூட்டும்; மனித உள்ளத்தின் அமைதியைக் காக்கும்: அறியாமையில் மூழ்கி ஒளியிழந்த அறிவுக்கு ஒளியூட்டும்; சிறந்த மனிதனுக வளர வழிகாட்டும்; இவ்வாறு வழிகாட்டும் பொருள் நிறைந்த மொழிகளைத்தான் பொருள் மொழிக் காஞ்சி என்று நம் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடுவார்கள்.

பொருள்மொழிக்காஞ்சியாவது— முனிவர்களாகிய உலகப் பெரியவர்கள் தாங்கள் தெளிந்துகண்ட மெய்ப்பொருளை விரும்பி மக்களுக்கு உரைக்கும் மொழியே யாகும் என்று சேர பரம்பரையினராகிய ஐயனுரிதனுர் கூறுவர்.

இதனை அவர்

"எரிந்தி லங்கு சடைமுடி முனிவர்
புரிந்து கண்ட பொருண்மொழிந் தன்று"

–புறப்பொருள் வெண்பாமாலை;
பொதுவியற்படலம்; 271·

என்று குறிப்பிட்டுள்ளார். புரிந்துகொண்ட பொருண்மொழியென்ற தொடர்க்குத் தாங்களே மிக மிக விரும்பியுணர்ந்து தெளிந்த பொருள்மொழிகள் என்பது பொருளாகும்.

இனி, பொருள்மொழிகளுள் தொன்றுதொட்ட மக்கள் உரைத்த பொருள்மொழி ஒன்றை நாம் பார்ப்போமாக!

நமக்குக் கிடைத்தற்கரிய பெருஞ்செல்வம் சங்க இலக்கியமாகும். அவ்விலக்கியத்தைச் சார்ந்த புறநானூற்றில் பெரும்புலவர் கணியன்பூங் குன்றனார் கீழ்க்கண்டவாறு கூறுகின்றார் :—

வாழ்க்கையில் எனக்குப் பகைமை உணர்ச்சியே இல்லை; ஆகவே எல்லா ஊரும் என்னுடைய ஊர்தான். பகைமையுணர்ச்சி இல்லாததனால் பகைவர் இல்லை; அதனால் எல்லா மக்களும் எனக்கு உறவினர்களே! பொதுவாக ஒருவருக்குத் தீமையும், நன்மையும் பிறர் தருவதினால் உண்டாவது இல்லை. தன் செயலாலே வருவனவாகும். அதுபோலவே ஒருவருக்கு வாழ்க்கையில் ஏற்படும் துன்பமும் இன்பமும் பிறரால் உண்டாக்கப்படுவன அல்ல. தம்முடைய செயலாலே தோன்றுவனவாகும். இவ்வுலகத்திலே இறந்துபோதல் என்ற நிகழ்ச்சியானது புதிய நிகழ்ச்சியில்லை; அவை இயல்பாக நடைபெறும் நிகழ்ச்சியாகும். இந்நிலவுலகில் மகிழ்வுதரும் செயல்களைக் காணும்பொழுது வாழ்க்கையானது இனியது என்று பெருமிதம் கொள்ளவில்லை; அவ்வாழ்வில் துன்புற்ற காலத்து வாழ்வை வெறுத்தொதுக்கி வருந்தவுமில்லை; வானமானது மின்னலோடு குளிர்ந்த மழையைப் பெய்யும். அம்மழை வெள்ளம் ஆற்றில் கற்களை உருட்டிச்செல்லும். அவ்வெள்ளத்தின் வழியே அதன் ஆளுகைக்கு உட்பட்டுச் செல்லும் தெப்பம் போல உயிரானது ஊழ்

வினையின் ஆளுகைக்கு உட்பட்டு அதன் வழியே இயங்குகின்றது. இவ்வுலக மக்கள் வாழ்க்கையில் வழிவழியாகக் கண்டு தெளிந்த இவ்வுண்மையைச் சான்றோர்களின் நூல்கள் வாயிலாக நாம் தெளிந்தோம். ஆதலால் இவ்வுலக வாழ்க்கையில் செயற்கரிய செயல் பலவற்றை ஆற்றிய பெரியவர்களைக் கண்டு நாம் வியப்பதுமில்லை; அதற்காக அரிய செயல்கள் செய்யாத சிறியவர்களை இகழ்ந்து வெறுத்து ஒதுக்குவதுமில்லை என்பதாகும்.

யாதும் ஊரே யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின், மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

–புறநானூறு : 192

இப்பொருள் நிறைந்தபாடலை இயற்றியவர்கணியன் பூங்குன்றனார் ஆவர்.

இப்பாடலில் புலவர் பூங்குன்றனார் இவ்வுலக இயல்பை எடுத்து விளக்குகின்றார்; உலக ஒருமைப் பாட்டை உணர்த்துகின்றார்; அன்பின் அரிய ஆற்றலை அறிவுறுத்துகின்றார்; பெருமையும் சிறு மையும் தான்தரவருமே என்றும், ஊழ்வினை வழியே உலகம் நடக்கும் என்றும் வலியுறுத்திக் கூறுகின் றார் கவிஞர். உண்மையில் இப்பொருள் மொழிகள் காற்றில் கலந்துள்ள நீர்த்துளிகளைப் போன்று பாடலில் கலந்து நன்மை பயக்கக் காணுகின்றோம். இப்பொருள்மொழிகள் வாழ்க்கையில் களைத்து நாவறண்ட மனிதனுக்கு இளநீரைப் போன்று வாழ் வளித்து நிற்கின்றன; உள்ளத்தில் அமைதியைப் பிறப்பிக்கின்றன; மக்கிப்போய் மடிந்துகிடக்கும் அறிவிற்கு எழுச்சியைத் தருகின்றன; நன்மை பயக் கும் நல்வழியில் நம்மை நடத்திச் செல்கின்றன. சோர்ந்த மக்களுக்குச் சோர்வகற்றித் தேர்ந்த பொருள் வழங்கும் இப்பொருள்மொழிகள் தமிழர் களுக்குக் கிடைத்தற்கரிய கருத்துச் சுரங்கங்க ளாகும்.



# வீர மொழிகள்

உலகில் பிறந்த உயிரினங்கள் தங்கள் தங்கள் உணவைப் பெற முயல்கின்றன. அதற்காகப் போராடித் தங்கள் வீரத்தை வெளிப்படுத்துகின்றன. ஆதியில் வாழ்ந்த ஆறறிவு படைத்த மனிதனும் உணவுக்காகப் போராடினுன். உடல் வலிமையின் மூலம் தன் வீரத்தை வெளிப்படுத்தினுன். பின் காதல் உணர்வு தோன்றவே காதலியை அடையத் தன் வீரத்தைக் காட்டி வெற்றி கொண்டான். பின் இன உணர்வு எழுந்தது. தன் இனத்தை– தன் வீட்டைப் பாதுகாக்கும் கடமை பிறந்தது. பாதுகாவலுக்காகப் பகையோடு போராடித் தன் வீரத்தை நிலை நாட்டினுன். இவ்வாறு படிப்படியாக வீர உணர்வு மனிதனுள்ளே காட்டாருகப் பொங்கி எழுந்தது. காலம் சென்றது. நாகரிகம் வளர்ந்தது. தலைவனு யிருந்தமனிதன் அரசனுனன். நாட்டை ஆண்டான். நாட்டைக் காக்கும் பொறுப்பை ஏற்ருன். நாட்டின்

காப்புக்காகவும் போரில் வீர உணர்ச்சியைப் பயன் படுத்தினன். இவ்வாறு இயற்கையில் மனித னுள்ளே பிறந்த வீர உணர்வானது பண்பட்டது. பண்பட்ட வீரத்தை நாம் இருவகையினதாகப் பிரிக் கலாம். முதலாவது உடல் வலிமையைக் காட்டிப் பெறுகின்ற வீரமாகும்; இரண்டாவது புலனடக்கத் தால் ஒழுக்க நெறி காக்கும் வீரமாகும். முதல்வகை வீரத்தைக் காட்டிலும் இரண்டாம் வகை உயர்ந்த தெனக் கருதப்பட்டது. உடல் வலிமையைவிட உள்ள வலிமையில் பிறக்கும் வீரத்தை உலகம் பாராட்டத் தொடங்கிற்று. இவ்வகை வீர உணர்வு சான்ருேர் தம் தூய உள்ளத்தில் உருவாகியது; தன்னம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது; எவ்வளவுக் கெவ்வளவு தன்னம்பிக்கை உறுதியாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு வீர உணர்வும் உயர்ந்து விளங்கிற்று. இத்தகைய வீர உணர்வை, நம் நாட்டு விடுதலைக்காகப் போராடிய மாமுனிவர் மகாத்மா காந்தியடிகளிடமும் நாம்கண்டு இன்புறலாம். அவருடைய உள்ளம் ஒழுக்கநெறியில் சென்றது; தான் கொண்ட கொள்கையில் அசைக்க முடியாத உறுதியினைப் பெற்றது; தெய்வத்தை அடிப் படையாகக் கொண்டு தன்வழியை வகுத்துக் கொள் ளத் தொடங்கியது. தெய்வசிந்தனை இல்லையேல் எவ்வித ஒழுங்கும் எவ்வித வெற்றியும் இவ்வுலகில் நிகழாது என்று முழு உறுதியோடு மகாத்மாகாந்தி யடிகளின் உள்ளம் எண்ணியது. அந்த எண்ணத் தில் முழு உறுதியோடும் – தன்னம்பிக்கையோடும் காந்தியடிகள் வாழ்ந்தார். வாழ்வில் வெற்றியும் பெற்ருர். இதனை அவரே ஓரிடத்தில்,

"நானும் நீயும் இந்த அறையில் உட்கார்ந் திருப்பது உறுதியல்லவா? அதைவிட உறுதி எனக்கு ஆண்டவன் இருப்பது. இன்னும் சொல் வேன். காற்றும் நீரும் இல்லாமல் ஒருவேளை நான் பிழைத்திருப்பேன். ஆனால் அவன் இன்றி என் உயிர் நிற்காது. என்னுடைய கண்களைப் பிடுங்கி விடலாம்; அது என்னைக் கொல்லாது. என் மூக்கை அரிந்துவிடலாம்; அதுவும் என்னைக் கொல்லாது. ஆண்டவன் இருக்கின்றான் என்கிற என் உறுதி யைக் கெடுத்துவிட்டீர்களானால் நான் செத்தே போவேன். என்ன முரட்டு மூடத்தனம் என்று சொல்வீர்கள். ஆனால் இந்த மூடபக்தியை நான் அணைத்துக் கட்டிக்கொண்டு பிழைக்கின்றேன்."

—ஹரிஜன் : 14–5–38

(ரகுபதிராகவ ; தமிழாக்கம்: இராஜாஜி)

என்று கூறுகின்றார். இறைவனிடத்தே கொண்ட கொள்கை, எத்துணை வேகத்தோடு வீரமொழிக ளாக இங்கு வெளிப்படுகின்றது பாருங்கள்! அவர் தம் ஊனில் உயிரில் உள்ளத்தில் கலந்து நிற்கும் தெய்விக உணர்வு இங்கு வீர உணர்வாகவே வடி வெடுக்கக் காணுகின்றோம். அவ்வீர மொழிகள் ஒழுக்கத்தினின்றும் எழுந்த மொழிகளாகி தெய்வ சிந்தனையை ஊட்டி மனிதப் பண்புகளையே காப்பன வாக அமைந்துள்ளன.

வீரம் என்பது போர்த்திறமையோடு மட்டும் நின்றுவிடுவதன்று; புலனடக்கத்தால் ஒழுக்கநெறி நின்று காக்கும் வீரமே உயர்ந்தது என்பதைக் கண்டோம். அவ்வீரத்திற்குப் புலவர்கள் எங்ஙனம்

இலக்கணம் வகுத்துள்ளனர் என்பதைப் பார்ப் போம். வீரமொழிகளைப் புலப்படுத்தும் துறைகளுள் "வஞ்சினக் காஞ்சி" என்று ஒன்று உண்டு. அஃது இரத்த வெறிபிடித்த பகைவர்களை அடியோடு அழிப் பதற்குப் புறப்பட்ட ஒரு வீரன் சபதம் செய்வது போன்றது. பாரதத்தில் அபிமன்யுவை நயவஞ்சக மாகக் கொன்ற சயத்திரதனைப் பொழுது சாய்வதற் குள் தலையைத் துண்டிப்பேனுக என்று அர்ச்சுனன் சூளுரை கூறுகின்ற துறை போன்றதாகும்.

"வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப
வஞ்சினங் கூறிய வகைமொழிந் தன்று"

—புறப்பொருள் வெண்பாமாலை;
காஞ்சிப்படலம் : 69

என்று வஞ்சினக் காஞ்சியின் இலக்கணத்தைக் கூறுவர் சேரபரம்பரையினராகிய ஐயனரிதனர்.

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் சோழ நாட்டில் நலங்கிள்ளி என்ற ஒரு அரசன் ஆண்டுவந் தான். அவன் சிறந்த புலவன்; நல்ல வீரனுமா வான். அவனுடைய படை வலிமையை அறியாது பகையரசன் ஒருவன் படைஎடுத்து வந்தான். அக்கால நலங்கிள்ளி சொல்லுகின்ருன் :—

பகைமன்னர்கள் என்னுடைய நல்ல அடியைப் பணிந்து தங்கள் அரசைத் தருக என்று இரந்து கேட்பார்களேயானல் உடனே சீர்மையையுடைய முரசு பொருந்திய வாழையடி வாழையாய் வருகின்ற அரசுரிமையைக் கொடுப்பது எனக்கு மிகமிக எளி

தேயாகும்; என்னுடைய இனிய உயிரையும் கொடுப்பேன். ஆனால் என்னை மதிக்காமல், இந் நாட்டிலுள்ள அமைச்சர், படைத் தலைவர் முதலிய ஆற்றலுடையோரது வலியை எண்ணாமல், படை யெடுத்துவரும் பகைவன், உறங்கும் புலியை இடறின குருடன்போல மாய்ந்தொழிவான். அவன் பிழைத்துப்போதல் எவ்வகையாலும் முடியாத ஒன்றாகும். மூங்கிலை உணவாகக்கொள்ளும் வலிமை யுடைய யானையினது காலின் கீழ் அகப்பட்ட வலிய மூங்கில் முளைபோல அவன் சிதையுமாறு அழித்து ஒழிப்பேன். அவ்வாறு செய்யேன் ஆகில் தீதில்லாத நெஞ்சகத்தால் காதல் கொள்ளாத ஒழுக்கமற்ற விலைமாதர்களின் பொருந்தாத புணர்ச்சியிடை என் னுடைய மாலை துவள்வதாக எனக் கூறுகின்றார். இக்கருத்தை அடக்கிய பாட்டுத்தான்,

மெல்ல வந்துஎன் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவ ராயின் சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்
இன்னுயி ராயினுங் கொடுக்குவென்; இந்
நிலத்து
ஆற்ற லுடையோ ராற்றல் போற்றாதுஎன்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே:
மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்திணி நீள்முளை போலச் சென்று அவண்
வருந்தப் பொரேஎ னாயின், பொருந்திய

தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்இருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே!

–புறநானூறு : 73

அரசன் நலங்கிள்ளியின் சூளுரையில் மூன்று விதமான வீரத்தை நாம் காண்கின்றோம். முதலாவது அவன் கொடைவீரம். பகைவர் இரந்துகேட்டால் நாட்டையும், உயிரையுங்கூடக் கொடுப்பேன் என்று உரைப்பதிலிருந்து அவனது கொடைவீரம் வெளிப்படக் காண்கின்றோம். அடுத்து அவன் படைவீரம். தூங்கும் புலியை இடறிய குருடன் புலியிடத்து மாய்தல் போன்று, தன்மேல் படையெடுக்கும் பகையரசன் மாய்வன் என்று உரைக்கும் பகுதியிலிருந்து அவனது படைவீரம் ஒலிக்கக் காணுகின்றோம். மூன்றாவதாக அவன் நடைவீரம். பகையரசனை அழித்துப் போரில் வெற்றிபெறாவிட்டால் நான் அணிந்திருக்கும் மாலை விலைமாதர்பால் துவள்க என்பதிலிருந்து அவன் தன் ஒழுக்கத்தின் உயர்வாம் நடைவீரம் விளங்கக் காணுகின்றோம். சோழன் நலங்கிள்ளி புலனடக்க ஒழுக்கநெறி நின்றான். கற்புவழி பிறழாத வாழ்வை ஏற்று நடக்க வேண்டும் என்ற கொள்கையில் உறுதிகொண்டான்; நடைமுறையில் எதிர்த்து வருகின்ற எத்துன்பத்தையும் தன்னம்பிக்கையோடு ஏற்று வெற்றிபெற்றான்; அறம்செயவிரும்பினான்; அதனால் தான் அவனது வீர மொழிகளில் அவனது கொடைவீரமும், படைவீரமும், நடைவீரமும் புலனாகக் காண்கின்றோம். கொண்ட கொள்கையில் பண்பட்டு உயர்ந்த நலங்கிள்ளியின் வீரம் பகைவர்களை ஆயிர

மாயிரம் மைல்கள் தூரம் விரட்டி வெற்றிபெறும் போர் வீரத்தைக் காட்டிலும் மாவீரம் படைத்தது என்பது நமக்குப் புலனாகிறதல்லவா? விடுதலை முனிவர் காந்தியடிகளின் வீரமொழியில் கடவுட் காதல் வெளிப்பட்டது போல நலங்கிள்ளியின் வஞ்சின மாகிய வீரமொழியில் கற்பொழுக்கம் வெளிப்படுதல் காண்கின்றோம். இவ்வாறு வீரம் பண்போடு கலக்கும் பொழுது உயர்ந்த அறமொழிகளைத் தோற்றுவிக்கின்றது; அவ்வறமொழிகள் மக்களுக்கு வழிகாட்டும் அமுதமொழிகளாகின்றன; மக்களையே உயர்த்துகின்றன; அம்மொழிகள் வாழ்க!



# அறமாமோ !

"அறஞ்செய விரும்பு" என்பது ஔவையார் திருவாக்கு! அறம் செய்தல் வாழ்க்கையில் இன்றி யமையாத ஒன்றாகும். பண்டைக் காலந்தொட்டுத் தமிழகத்தில் பெண்கள் தங்கள் வீட்டிற்குமுன் கோலம் புனைவார்கள். கோலம் புனையும் கோலப் பொடி அரிசி மாவாக அமையும். அவ்வரிசிமா மண்ணில் ஊரும் எறும்புபோன்ற உயிரினங்களுக்கு உணவாகும். இவ்வாறு தமிழர்கள் வாழ்க்கையில் கோலம்புனைதல் தொடங்கிக் குடியுயர்த்தும் செயல் வரை அறஉணர்ச்சி கலந்திருப்பதை நாம் காணலாம். அவர்கள் எத்துறையிலும் அறம் வளர்க்கும் நோக்கம் கொண்டவர்களாக வாழ்ந் தனர். அறத்தைப் போற்றினர். அறம் மக்களுக்குப் புகழோடு கூடிய சிறப்பை அளிக்கின்றது; நிறைந்த எல்லாவகைச் செல்வத்தையும் கொடுக்கின்றது; மண்ணில் வாழ்கின்ற உயிர்க்கு அறத்தைக்

காட்டிலும் நன்மை செய்யக்கூடிய ஒன்று இவ்வுலகத்தே உண்டா? என்று நம்மைக் கேட்கின்றார் திருவள்ளுவர்.

சிறப்புஈனும் செல்வமும்
ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ
உயிர்க்கு !

—பா. எ: 31

என்பது அத்திருக்குறளாகும். இவ்வாறு வாழ்க்கையில் சிறப்பையும் செல்வத்தையும் கொடுக்கும் அறம் நல்லறமாகவும் திகழ வேண்டும் அல்லவா? நாம் செய்யும் அறம் எல்லோருக்கும் நன்மை செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். தன் நலமின்றிப் பிறருக்குப் பயன்படும் வகையில் அமைய வேண்டும். நாம் செய்யும் அறம் ஒரு சிலருக்குத் தீமையும் பெறுபவருக்கு மட்டும் நன்மையுமாக அமையுமே யானல் அந்த அறத்தின் தன்மையே கெட்டுவிடு மல்லவா? மல்லிகை மலர் மணக்கின்றது: ஆனல் அம்மல்லிகை ஒருசில காலங்களில் நறுமணத்தையும், வேறு சில காலங்களில் நமக்கு ஒவ்வாத தீய நாற்றத்தையும் வீசலாமா? எவ்வாறு எக்காலமும் மல்லிகை நறுமணத்தைப் பரப்புகின்றதோ அவ்வாறே நாம் ஆற்றும் அறமும் எக்காலத்தும் நன்மையையே பயக்கவேண்டும். செல்வர், வறியவர், உயர்ந்தோர், தாழ்ந்தோர் முதலிய வேறுபாடின்றி எல்லா மக்களுக்கும் எங்ஙனம் மல்லிகை மணத்தைப் பரப்புகின்றதோ, அங்ஙனமே

எல்லோருக்கும் அறம் பயன்படுமாறு செய்ய வேண்டும். இவ்வகையில் அமையும் அறந்தான் நல்லறமாக மக்களால் போற்றப்படும்.

பொதுவாகத் தமிழ்க் கவிதைகளுக்கு அழகைக் கொடுப்பது அணி இலக்கணமாகும். அணி வகைகள் பலவகைப்படும். அவ்வகைகளுள் இலேச அணி என்பது ஒன்ருகும். அஃது ஒன்றைப் புகழ் வதுபோலப் பழித்தலும், பழிப்பதுபோலப் புகழ்தலும் என இருவகைப்படும்.

"புகழ்வது போலப் பழித்திறம் புனேதலும்
பழிப்பது போலப் புகழ்புலப் படுத்தலும்
அவையும் அன்னஎன்று அறைகுநர்
உளரே"

—தண்டியலங்காரம்: 40

இதில் பழிப்பது போன்று புகழ்தல் என்பது புறத்தே பழிப்பது போன்று தோன்றும்; ஆனல் உண்மை யாக நோக்குமிடத்துப் பழிக்கப்பட்ட பொருள் புகழப்பட்டு நிற்கும். இதனே வஞ்சப் புகழ்ச்சி அணி என்றும் இலக்கண நூலார் கூறுவர். பாண்டியன் பல்யாகசாலே முதுகுடுமிப் பெருவழுதி சீரும் சிறப்புமாக வாழ்ந்தான். நாடிவருகின்ற புலவருக்கு நாளும் இல்லே யென்னது ஈந்தான். கொடை வள்ளலாகவும் அறக் காப்பாளனுகவும் வாழ்ந்தான். அவ்வாறு வாழ்ந்த மன்னவனேப் பழிப்பதுபோலக் கூறுகின்ருர் நெட்டிமையார் என்னும் புலவர். பாண்டிய மன்னன் செய்வது அறந்தான? என்னும் ஐயந்தோன்ற ஒரு கேள்வியைக் கேட்டு இலக்கியச் சுவைபடப் புலவர் பேசும் பேச்சைப் பாருங்கள்!

மாட்சிமையுடைய முதுகுடுமிப் பெருவழுதியே! நீ செய்ததைச் சிந்தித்துப்பார். இசை வல்ல பாணர்கள் நின்னிடம் வந்தால் அவர்கள் உள்ளம் மகிழப் பொன்னாலான தாமரை மலரை வழங்குகின்றாய். அவர்கள் அதனைச் சூடிக்கொள்கின்றனர். தமிழ்ப் புலவர்களுக்கோ பொன்னாலான பட்டத்தை அணிந்த யானைகளையும் சிறந்த தேர்களையும் வழங்குகின்றாய். இவ்வாறு ஒருபால் பொருள் வழங்கி அறம் செய்கின்றாய்; ஆனால் மற்றொருபால் நின் பகைவர்களைத் துன்புறுத்துகின்றாய்; அவர்கள் நாட்டைக் கைப்பற்றி வெற்றிகொள்கின்றாய்; பகைவர்களைத் துன்புறுத்தி, நினக்கு வேண்டியவர்களுக்குப் பரிசினைக் கொடுக்கின்றாய்; இஃது அறந்தானோ? என்று கேட்கிறார் புலவர். இப்பாடல்தான்:-

"பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறல்மாண் குடுமி!
இன்னா வாகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே"

– புறநானூறு: 12.

இப்பாடலில் நெட்டிமையார் என்னும் புலவர் பாண்டிய மன்னனின் அறத்தைப் புகழ்கின்றார். பாணருக்கும் புலவருக்கும் வழங்கும் கொடைத் தன்மையைப் பாராட்டுகின்றார். ஆனால் அதே நேரத்தில் ஒருபால் அறம் புரியும் மன்னவன் மற்றொருபால் பகைவரைத் துன்புறுத்துகின்றான்; நாட்டைக் கைப்பற்றிக் கொள்கின்றான்; அவர்களுக்

குத் துன்பத்தைக் கொடுக்கின்ருன். ஒருவருக்குத் துன்பமும் மற்றவர்களுக்கு இன்பமுமான அறத்தை மன்னன் ஆற்றுவது அழகாகுமா? அஃது அறத்தின் பாற்படுமா? என்று கேட்கின்ருர் புலவர். அறம் நல்லறமாகத் திகழுமாஞல் அஃது எல்லாருக்கும் சமநிலையில் நின்று நன்மையைத் தானே செய்ய வேண்டும்; ஆனல் பாண்டியன் செய்யும் அறம் ஒருபாற் கோணுதலாகிய அறமாகத் திகழுகின்றதே என்று கூறி மன்னனைப் பழிப்பது போலப் பாடியுள்ளார் புலவர். ஆனல் உண்மையில் நோக்குமிடத்து மன்னனின் கொடைத் தன்மையைப் புகழுகின்ருர். பகைவர் நாட்டை வெற்றி கொள்வதனுல் மன்னனின் படை வீரத்தைப் பாராட்டுகின்ருர். அதுபோழ்தே பகைவர்பால் படை வீரத்தைக்காட்டி அவர்களைத்திருத்தி வாழவைக்கும் பெருந்தகையாளன் என்றும் அவனது பண்பைப் பாராட்டிப் புகழ்கின்ருர்; மேலும் அறம் எனப்படுவது மனத்தூய்மையோடு செய்யப்படுவதொன்ருகும். ஒருவன் தன் உள்ளத்தில் குற்றம் இல்லாதவனுக இருந்தால் அவன் ஆற்றும் அறம் உண்மையில் எல்லோருக்கும் ஒரே அளவில் நன்மையைப் பயக்கும்; அவ்வுண்மைக் கேற்பப் பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி உயர்ந்த உள்ளத்தவனுக வாழ்ந்தான்; உள்ளத்தில் குற்றமற்றவனுக வாழ்ந்தான். பகைமன்னன்பால் படைவீரத்தைக் காட்டி வெற்றிகொண்டான்; அந்நாட்டு மக்களும் அப்பகை மன்னனின் ஆட்சியினின்றும் விடுதலை பெற்று வாழ உதவினுன்; அக்குடிமக்களும் தன்நாட்டு மக்களைப் போன்று வாழவேண்டுமென்றே எண்ணினுன். அவர்கள் பொருள்களைத் தன்னலத்திற்காகப்

பயன்படுத்தவில்லை. அப்பொருள்களை எல்லாம் இசை வளர்க்கும் பாணருக்கும் இயற்றமிழ் போற்றும் புலவருக்கும் அள்ளித்தந்தான். அப்பாண்டிய மன்னன் செய்த அறம் பகைவர் — பரிசிலர் ஆகிய இருபாலார்க்கும் நன்மை செய்தமையால் நல்லறமேயாகும் என்று கூறி அவனைப் புகழ்கின்ருர் புலவர். இவ்வாறு மன்னன் செய்வது அறந்தானு என்ற ஒரு ஐயத்தை எழுப்பிக்கொண்டு பாண்டிய மன்னனைப் பழிப்பது போலப் புகழ்ந்து பாராட்டுகிருர் நெட்டியமையார். அவர் தம் பாடலில் இலக்கிய அணிநயம் செறிந்திருப்பது எண்ணி எண்ணி இன்புறத் தக்கதொன்ருகும்!



# உலகைக் காப்பவர் யார்?

உலகில் மக்கள் வாழத் தொடங்கினர்; பல்வேறு செயல்களை ஆற்றத் தொடங்கினர். ஒரு சிலர் தம் திறமையால் உலக மக்களுக்கு நன்மையைப் புரிந்தனர்; ஒருசிலர் தம் திறமையால் தீமையைப் புரிந்தனர். ஆடுமாடுகளைப் பெருஞ்செல்வமாகக் கருதி வாழ்ந்தனர் மனிதர்கள்; ஆனால் அவ்வாடு மாடுகளைத் திருடிப் பிழைத்தனர் ஒரு சாரார். வயிற்றுப் பசி எல்லோருக்கும் பொதுவானது. வயிற்றுப் பசிக்கு உணவை உண்பது மனித இயற்கையாகின்றது; ஆனால் ஒரு சிலர் தன் வயிற்றுக்கு அடிமையாகித் தன் வயிற்றை நிரப்புதல் ஒன்றே தொழிலாகக்கொண்டனர். உணவைத் தேவைக்கு மேல் சேர்த்துத் தனித்து உண்டு வாழ்ந்தனர்; பசியால் வாடும் மனிதனை எதிரில் வைத்துக் கொண்டே உண்டு களித்தனர்; இவ்வாறு தனித்து உண்டு வாழும் மனிதர்களையும் நாம் உலகத்தே காணா

கின்ருேம். வாணிகத் துறையிலோ ஊதிய நோக்கம் ஒன்றையே அடிப்படையாகக் கொள்ளும் மனிதர் களேயே நாம் பார்க்கின்ருேம். ஊதியத்திற்காக அம்மக்கள் எதனேயும் செய்யும் ஆற்றல் உள்ளவர் களாக விளங்குகின்றனர். நல்ல பொருள்களோடு தீயனவற்றைக் கலந்து பொருள் விற்பனே செய்வர்; இவ்வாறு பழிநிறைந்த செயலேச் செய்யும் ஒரு சிலரையும் நாம் உலகில் சந்திக்கின்ருேம். இன்னும் சிலர் சினமே வடிவுடையவர்களாக வாழ்கின்ருர்கள். அமைதியை உண்டு ஏப்பமிடும் சினத்தைத் தனக் குள்ளே வளர்க்கின்ருர்கள். இன்னும் பொருமைத் தீயால் வாடும் மனிதர்களும் உண்டு. இவர்களெல் லாம் அன்பை மறந்தவர்கள். அறிவே தெய்வ மென்று அறிவின் முனேயிலே இதயத்தைப் பலி கொடுத்து வாழும் அன்பற்றவர்கள் ஆவார்கள். அறிவை விலேப்பொருளாகக் கொண்டு நீதி மன்றத்தில் பொய்மைக்கு வாதிடும் திறமைசாலிகள்; வெற்றிப் பாதை ஒன்றையே கருதிப் பொய்யை-அநீதியை வளர்ப்பவர்கள்; நிலேக்க வழிதேடு பவர்கள். இன்னும் சிலர் சாதிப்பூசலிலும், உயர்ந் தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாட்டிலும், தன் ஆற்றலே இழந்து வாடுபவர்கள். மற்றும் சிலர் தன்னலத்திற்கே பாடுபடுபவர். உலகம் எந்த நிலேயை அடைந்தாலென்ன? என்றே எண்ணி வாழ்பவர்கள், இவ்வாறு மக்கள் சமுதாயத்தில் அன்ருட வாழ்க்கையில் உலகை அழிவுப் பாதையில் செலுத்தும் மனிதர்களேயும் நாம் சந்திக்கலாம்; அவர்கள் தங்கள் நலத்தைப் பாழ்படுத்திக் கொள்வதோடு உலகையும் பாழ்படுத்துகின்ருர்கள். இவ்வாறு உலகம் அழிவை நோக்கிச் செல்வதால்

இவ்வுலகம் நிலைத்திருக்குமா அல்லது அழிந்து படுமா என்ற ஐயம் நமக்கு எழுவது இயல்புதானே! உண்மையில் உலகை வாழ்விக்க வேண்டிய மக்களே உலகை வீழ்த்த முற்படுகின்றனர். இவர்கள் செயலால் உலகம் நிலைக்குமா என்று கேட்டால் உண்மையில் உலகம் நிலைக்காது என்று தானே நாம் பதில் கூற முடியும். ஆனால் அழிவை நோக்கிச் செல்லும் இவ்வுலகைக் காப்பவர் உண்டா என்றால் உண்டு என்று கூறுகின்றார் ஒரு பாண்டிய அரசர். இவ்வுலகத்தே பெருமைமிக்க சான்றோர்கள் வாழ்ந்து கொண்டிருப்பதனால் இவ்வுலகமானது அழியாது; அவர்கள் தம் தொடர்பால், பிறர்க்கென வாழும் அவர்கள் தம் பண்பால் உலகம் காப்பாற்றப் படும், நிலைத்து நிற்கும் என்று கூறுகின்றார் இளம் பெருவழுதியார்.

உண்மையில் சான்றோர்கள் தங்கள் கடமை களினின்றும் தவறாதவர்கள்; தாங்கள் கொண்ட நேரிய கொள்கையை ஆற்றுவதில் முயற்சியுடைய வர்கள்; எத்தகைய துன்பங்கள் சூழ்ந்தாலும், ஊழிக் காலத்து வேறுபாடுகளே நேர்ந்தாலும் தங்கள் கொள்கையினின்றும் மாறுபடாத உறுதி யினை உடையவர்கள். அவர்கள் தங்களுக்குத் துன் பமானவற்றைச் செய்தவர்களுக்கும் இனிய உதவி களை ஆற்றுபவர்கள். அத்தகைய சான்றோர்கள் வாழ்வதினால் தான் இவ்வுலகமானது நிலைத்திருக் கின்றது என்று கூறுகின்றார் இளம்பெரு வழுதியார். அவர்தம் கருத்து வருமாறு:-

உணவுகளுக்குள்ளே மிகச் சிறந்தது தேவர் உலகத்தே கிடைக்கக்கூடிய அமுதமாகும். அவ்

வமுதமே தங்களுக்குக் கிடைத்தாலும் தனித்துத் தாங்கள் மட்டும் உண்ண மாட்டார்கள் இங்கு வாழும் சான்றோர்கள்; இவர்கள் விருப்பு வெறுப்பு அற்றவர்கள். பிறர் கடுமையாகப் பேசினும் தங்கள் கருணையால் அவற்றை நன்மைக்குரிய மொழியாக ஏற்றுக்கொள்வர்; மற்றைய மக்களைப் போன்று சினமடையாதவர்; சிந்தித்துத் தாங்கள் கொண்ட கொள்கையைச் செயலாக்க முற்படுபவர்; அங்ஙனம் செயலாற்றுங்கால் தோல்விக்குமேல் தோல்வி வரும்பொழுது, உள்ளத்தால் சோர்வு அடையமாட்டார்கள்; மற்றவர்களைப்போல் அதிகாரத்திற்கோ ஆணவத்திற்கோ அஞ்சமாட்டார்கள்; ஆனால் அஞ்சவேண்டியவற்றிற்கு அஞ்சுவார்கள் உலக மக்களுக்கு நன்மை நிறைந்த செயலை ஆற்றுபவர்கள்தானே உலகில் புகழப்படுகிறார்கள்; அத்தகைய புகழைப் பெறத் தங்கள் நலத்தை மறந்து தங்கள் உயிரையும் கொடுத்து நிற்பர்; ஆனால் தீராத பழிக்கு இவ்வுலகையே பரிசாகக் கொடுத்தாலும் கொள்ளமாட்டார்கள்; பழியேற்று வாழும் வாழ்வை விரும்பமாட்டார்கள்; தாங்கள் செய்யும் செயலில் ஒருபொழுதும் தளர்ச்சியடைய மாட்டார்கள். இவர்கள் தன்னலமின்றிப் பிறர்க்கென, பிறரின் நன்மையின் பொருட்டே முயன்று பாடுபடும் சான்றோர்களாவார்கள். இவ்வகைச் சான்றோர்கள் இங்கு வாழ்ந்திருத்தலால் இவ்வுலகமானது நிலைத்து இயங்குகின்றது; காப்பாற்றப் படுகின்றது; இவர்கள்தம் செயலால் இவ்வுலகம் உண்டு என்ற நிலையினைப் பெறுகின்றது என்று கூறுகின்றார். இவ்வாறு சான்

ேருரைப் படம் பிடித்துக்காட்டி விளக்கும் பாடலின் முழு உருவமே,

“உண்டால் அம்மஇவ் வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்
உலகுஉடன் பெறினும் கொள்ளலர்;
அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே!”

– புறநானூறு: 182

என்பதாம்.

இளம்பெரு வழுதியார் இப்பாடலில் சான்ருேரின் பண்பை எடுத்துக் காட்டுகின்ருர்; சான்ருேர்கள் தங்கள் பண்பால் அழிவை நோக்கிச் செல்லும் உலகை ஆக்கவேலைக்குத்திருப்புகிருர்கள்; உயர்ந்த கருத்துக்களை மக்கள் சிந்திக்குமாறு செய்கிருர்கள். தங்கள் பொறுமையால் உலகில் ஏற்படும் சிக்கல்களை—பெருங் கேடுகளை நீக்கிவிடுகின்ருர்கள். மரணத்தின் தீயவாடை பரவா வண்ணம் உலகைக் காக்கின்ருர்கள். அன்பு நிறைந்த தங்கள் செயலால் துன்பத்தின் அனல் வெம்மையைக் குளிர்விக்கின்ருர்கள், உலக நன்மையின் பொருட்டுத் தங்கள் உள்ளம்—உரை—செயல்-என்ற மூன்ருலும் தூய்மையோடு தொண்டு

செய்கின்றூர்கள். பிறர்க்கென வாழ்தல் ஒன்றே தங்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு மக்களுக்கு நன்மை செய்கிறூர்கள். இத்தகைய மாண்பு மிக்க உணர்வால் பண்பட்ட அறிவால் உயர்ந்த சான்றோர்கள் இவ்வுலகத்தே வாழ்ந்திருத்தலினல், இவ்வுலகம் அழியாது காக்கப்படுகின்றது என்றும், மக்கள் சமுதாயத்தில் செய்யப்படும் ஊழல்களின் வேகம் உலகைத் தாக்கா வண்ணம் தங்கள் நற்செயல்களால் உலகக் கட்டுக்கோப்புப் பாதுகாக்கப்படுகிறதென்றும் கூறுகின்றூர் இளம் பெருவழுதியார். மேலும் சான்றோர்களே உலகக் காப்பாளர்கள் என்றும் உறுதியாக உரைக்கின்றூர். இவர்தம் கருத்து,

'சான்றவர் சான்றுண்மை
குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னே
பொறை'

– (990)

'பண்புடையார்ப் பட்டுண் டுலகம்'

– (996) என்னும்

திருக்குறள்களால் வெளிப்படுதல் காணலாம். பண்புடையார்ப் பட்டுண் டுலகம் என்ற தொடரிலே பனித்துளியில் யானையின் திருவுருவைக் காண்பது போல, புறநானூற்றுப் பாடல் முழுமையும் புலனகிறதல்லவா?



# நீரும் மலரும்

உள்ளத்தில் மறைந்து கிடக்கும் மகிழ்ச்சியை யாவரும் அறியுமாறு செய்வது சிரிப்பு. உள்ளத்தில் பதிந்து கிடக்கும் வருத்தத்தை யாவரும் எளிதில் உணருமாறு செய்வது அழுகை. இம்மாதிரி சிரிப்பு – அழுகை முதலியவற்றிற்கு மெய்ப்பாடு என்று பெயர். இந்த மெய்ப்பாடே பாவத்தோடும் இராகத்தோடும் தாளத்தோடும் கூடி ஒரு பாட்டின் பொருளை எளிமையாகப் புலப்படுத்துமேயானல் அதற்கு அபிநயம் என்று பெயர். அபிநயம் பாட்டின் பொருளை எளிதில் விளக்குவதுமாத்திரமல்ல— பாட்டுக்கே ஒரு கவர்ச்சியைத் தந்து கேட்போர் உள்ளத்தில் ஒருவகை மகிழ்ச்சியை எளிதில் எழுப்பி விடுகிறது. மெய்ப்பாடு எப்படிப் பொருளைப் புலப் படுத்துவதற்கு உரியதோ அம்மாதிரியே உவமையும் பொருட் புலப்பாட்டிற்கு உரியது.

வாழ்க்கையில் ஒரு மனிதன் தன்கருத்தை விளக்குவதற்கு உவமையைக் கையாளுகின்ருன். அம்மாதிரியே கவிஞர்களும் ஒரு கருத்தை விளக்குவதற்கு உவமையைக் கூறுகிருர்கள். விளங்காத பொருளேயும் மிக எளிதாக மக்கள் உள்ளத்தில் பதியுமாறு செய்துவிடுகிருர்கள். மக்கள் நாள் தோறும் பழகும் கிணறு, செடி, வாய்க்கால், நாய், முதலிய தெரிந்த பொருள்களேயே உவமையாகக் கூறி, மக்கள் உள்ளத்தில், அரும் பெரும் கருத்துக் களே, இயற்கையின் இயல்புகளே, தத்துவ உண்மை களே, எளிதில் விளங்குமாறு செய்து விடுகிருர்கள். எந்தக் கருத்தாக இருந்தாலும் அக்கருத்துக்களே, மக்கள் மிக எளிதாக வாங்கிக்கொள்ளுமாறு உவமை மூலம் வழங்கிவிடுகிருர்கள் கவிஞர்கள். அங்ஙனம் வழங்கும் கவிஞர்களே மக்களும் சிறப்பாகப் போற்றுகிருர்கள்.

இவ்வாறு மக்களால் போற்றப்படும் கவிஞர் பெருமக்களில் வழிபாட்டிற்கு உரிய கவிஞராக விளங்கும் பெரியார் திருவள்ளுவராவார். அவர் தாம் கருதிய கருத்தை, மக்கள் எளிதில் உணர்ந்து மனத்தகத்து அமைக்க எவ்வாறு உவமையைக் கையாளுகின்ருர் என்பதை நாம் காண முயல்வோம். மனிதன் சும்மாயிருப்பதற்குரிய இயல்பு உடையவன் இல்லே; ஏதாவதொரு செயலே அவன் செய்து கொண்டே இருக்க வேண்டும். தான் தொடங்கிச் செய்துவருகின்ற செயலேப் பற்றுதலோடும் ஊக்கத் தோடும் செய்யவேண்டும். அச்செயலில் கருத் தூன்றிக் கடமையை ஆற்றவேண்டும். இவ்வாறு

ஆற்றும் இயல்பைத்தான் திருவள்ளுவர் ஊக்கம் என்று குறிப்பிடுகின்றார்.

ஊக்கமாவது "மனம் தளர்ச்சியடையாமல் ஒரு தொழிலைச் செய்யுமிடத்துக் கிளர்ச்சியுடைத்தாதல்" -என்கிறார் பரிமேலழகர்.

ஊக்கமில்லாத பரம்பரைப் பணக்காரன் உடைமைக்காரன் அல்லன். ஊக்கமுடைய சாதாரண மனிதனே உடைமைக்காரன். பொருள் களாகிய உடைமை உடம்பினின்று வேறுபட்டது. நாளடைவில் அழிந்து போகக்கூடியது. ஊக்கமோ அப்படியல்ல; ஊக்கம் உள்ளத்தோடு தொடர் புடையது; அழியாதது. ஊக்கமுடைய ஒருவன் தன்னிடமுள்ள கடைசிக் காசையும் ஓர் அரசனைப் போல் செலவழிப்பான். பொருள் போய்விட்டதே என்று வருத்தப்படமாட்டான். ஆனால் பொருள் அவனைவிட்டு விலகுமோ? விலகாது. ஆகவே ஊக்கந்தான் சிறப்புடையது. எவ்வளவுக்கு எவ்வளவு முயற்சி மிகுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அவன் வாழ்க்கைத்தரம் உயர்வடைகிறது, என்றெல்லாம் முறையாகச் சொல்லிக்கொண்டே வந்த வள்ளுவர், மானிட சமுதாயம் உயர்வடை வதற்குரிய உண்மையை மிகத்தெளிவாக ஓர் உவமை மூலம் தெளிவுபடுத்துகிறார். குளத்து நீரில் பூக்கும் மலரையும், குளத்து நீரையும் வைத்துக் கொண்டு ஊக்கத்தின் தத்துவத்தைப் புலப்படுத்து கின்றார்.

நீர் நிறைந்த குளம். அதன்மேற்பரப்பிலே தாமரை மலர்கள் தலைதூக்கிக்கொண்டிருக்கின்றன;

குளத்து நீரின் ஆழம் எவ்வளவோ அவ்வளவு நீளம் தாமரை மலரின் தண்டும் நீண்டிருக்கிறது. மூன்று முழ நீளமுள்ள தாமரைத் தண்டாக இருக்குமேயானல் நீரின் ஆழமும் மூன்று முழந்தான் இருக்கும். தாமரைத் தண்டின் உயர்வு சுற்றியிருக்கும் நீரின் ஆழத்தைப் பொறுத்தது. மூன்றுமுழ உயரமுள்ள தாமரைத் தண்டு நான்கு முழமாக உயரவேண்டுமானல் மூன்று முழ ஆழமுள்ள நீர் நான்கு முழமாக உயர வேண்டும். அப்பொழுதுதான் தாமரைத்தண்டு நான்கு முழமாக உயர்ந்து நீர்ப்பரப்புக்குமேல் தலை காட்டும். மனிதனுடைய உயர்வும் இப்படித்தான். மனிதனிடம் கரைகடந்த வெள்ளம்போன்று ஊக்கம் அமைந்திருக்க வேண்டும். எவ்வளவுக்கு எவ்வளவு ஊக்கம் மிகுதியுடையவனுக மனிதன் இருக்கின்ருனே அவ்வளவுக்கு அவ்வளவு அவன் வாழ்க்கைத்தரம் உயர்வடையும். ஊக்கத்தின் பெருமைக்குத் தக்கபடி ஒரு மனிதனது உயர்வு அமைகின்றது. இதையே திருவள்ளுவர்,

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு"

– (திருக்குறள்: 595)

என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்த உவமையாற்றலால் வேருெரு சிறந்த கருத்தையும் ஆசிரியர் குறிப்பது நமக்குப் புலனுகும். தாமரை உயரவேண்டு மென்ருல் நீரின் எந்தப் பகுதி உயரவேண்டும்? தாமரையைச் சுற்றியுள்ள

பகுதி மாத்திரம் உயர்ந்தால் போதுமா? போதாது. அக்குளத்தின் வடகோடியிலிருந்து தென்கோடி வரையிலும், கீழ்க்கோடியிலிருந்து மேல்கோடி வரையிலும் ஒரேமாதிரியாக நீரின் அளவு உயர வேண்டுமல்லவா? குளத்துக்குள் இருக்கும் ஒரு பூ உயர, குளம் முழுவதுமே அல்லவா நீரால் உயர்வடைய வேண்டியிருக்கிறது. ஆகவே மனிதனுக்கு எதாவது ஒரு செயலில் உயர் வடைய வேண்டுமானல், தான் மேற்கொண்ட செயலில் மாத்திரம் ஊக்கமுடையவனுக இருந்தால் போதாது. எல்லாச் சிறு செயல்களையும் இழிபுடையன என்று ஒதுக்கிவிடாமல் எல்லா வகைச் செயல்களிலும் தம் கருத்தைச் செலுத்த வேண்டும். அப்பொழுதுதான், தான் மேற்கொண்ட குறிப்பிட்ட செயலில் உண்மையான உயர்வை அடைய முடியும் என்று திருவள்ளுவர் உவமையின் மூலம் நமக்குப் புலப்படுத்துகின்ருர். ஊக்கத்தைப் பற்றிய முழு உண்மையையும் உவமையின் மூலமாகவே கூறும் வள்ளுவர் ஆற்றல் போற்றி வணங்கவேண்டிய தொன்ருகும். இவ்வாறே தமிழ்க் கவிஞர்கள் பலரும் தங்கள் கருத்து முழுவதையும்—தங்கள் கருத்தின் எல்லா அங்கங் களையும்—ஒரேகாலத்தில் உவமை என்ற அலங்காரத் தின் மூலம் புலப்படுத்தி விடுகின்ருர்கள்.

திருவரங்கத்தே கண்ணுடிகள் சூழப்பெற்ற ஓர் அறையில் அரங்க நாதனைக் கொண்டுவந்து வைப்பார்கள். நாம் உள்ளே ஓரிடத்தில் இருந்து கொண்டு பெருமாளைப் பார்த்தால் அப்பொழுது ஒரே காலத்தில் பெருமாளின் முன்னழகையும்

பின்னழகையும் பக்க அழகையும் கண்டுகளித்து மகிழலாம். இம்மாதிரியே கவிஞன், பெருமாளைப் போன்று ஒரு கருத்தை அமைத்து விடுகின்றான். பெருமாளைக் கண்ணாடி அறைக்குள் அமைத்து அவருடைய எல்லாத் திருவழகையும் இருந்த இடத்திலிருந்தே பருகச் செய்வதுபோல் திருவள்ளுவர் தாம் கூறவந்த கருத்தை "உவமை" என்கிற கண்ணாடி அறைக்குள் எழுந்தருளச் செய்து தாம் கருதியதனைத்தும் மக்கள் உணருமாறு செய்துவிடுகிறார்.



# கடிதக்கலை - இலக்கியத்தில்

மலர் மலர்ந்தது. மணம் பிறந்தது. கண்கள் கலந்தன. காதல் பிறந்தது. தலைவி ஒருத்தி அடுத்த ஊர்த்தலைவன் ஒருவன்பால் காதல் கொண்டாள். மறுநாள் வருவதாகச் சொல்லிச் சென்ற காதலன் வரவில்லை. அவன் விரைவில் வந்து தன்னை மகிழ்விக்க வேண்டும் என்ற தன் உள்ளக் கருத்தைத் தலைவனுக்கு மறைவாகத் தெரிவிக்க எண்ணினுள் தலைவி. தன் ஊரில் பூத்த அன்றலர்ந்த மலர் ஒன்றைப் பறித்தாள். அதைத் தன் தோழியிடம் கொடுத்தனுப்பி வைத்தாள். அம்மலரைக் கண்ட காதலன் விரைவில் வந்து மகிழ்வித்தான். இப்படியாகப் பிறர் அறியா வண்ணம் கருத்தை ஏந்திச் சென்ற மலர் நாளடைவில் எழுத்தை ஏந்திச் சென்றது. நாட்கள் சுழன்றன. அரசியல் வளர்ந்தது. மதத்துறை பெருகிற்று. எழுதும் நாகரிகம் வளர்ந்தது. பனை

யோலையை ஏடுஏடாக வெட்டி ஒழுங்கு செய்தனர் மக்கள். அதில் எழுத்தாணி கொண்டு வரையவும் தொடங்கினர். அரசியல் காரணமாகச் செய்தி அனுப்புதற்கும் திருமணம் முதலிய நற்செய்தி களைத் தெரிவிப்பதற்கும் கவிதை முதலியவைகளை எழுதி வைப்பதற்கும் ஏட்டினைக் கையாண்டனர் மக்கள். இவ்வாறு மக்கள் வாழ்வுத் தேவையின் பொருட்டுக் காதலில் தோன்றி உருமாறிய இக் கடிதக் கலை படிப்படியாக வளர்ந்து மடல் என்றும்—முடங்கல் என்றும்—திருமுகம் என்றும்—ஓலை என்றும்—சுருள் என்றும்—இற்றைக் காலத்தில் கடிதம் என்றும் பலப்பல பெயரினைப் பெற்றது. இனிக் கடிதம் ஒரு கலையாக மலர்ந்த சிறப்பினை இலக்கியத்தின் வழிக் காண்போம்.

## காதற் கடிதம்

தமிழில் நமக்குக் கிடைத்திருக்கும் இலக்கியப் படைப்புகள் பெறுதற்கரிய பேறு படைத்தவை. சிறந்த பண்பாடுகளைப் பாத்திரங்களின் வாயிலாகக் காட்டிச் சிந்திப்பார் நெஞ்சை எல்லாம் தித்திக்க வைக்கும் இலக்கியம் சிலப்பதிகாரம். அதில் மாதவியின் கடிதம் ஒன்றைப் பார்ப்போமாக. கடற்கரையில் நடந்த மாதவி கோவலன் விளையாட்டில் ஊடல் நிகழ்ந்தது. அதன் காரண மாகப் பிரிந்தனர் காதலர்கள். வீட்டின் தோட்டத் தில் தனிமையின் வேதனையைத் தாங்காத மாதவி கோவலனுக்குக் கடிதம் ஒன்று எழுதத் தலைப் பட்டாள். வெண்தாழை — சண்பகம் — மாதவி—பச்சிலை—பித்திகை—மல்லிகை —செங்கழு நீர்

முதலிய மலர்களால் ஆன ஒரு மாலேயை எடுத்தாள். அம் மாலேயில் உள்ள அகன்ற வெண்தாழை மலர் இதழில் பூவின் அரும்பை எழுதுகோலாகக்கொண்டு செம் பஞ்சுக் குழம்பு என்னும் மையில் தோய்த்து மலரைத் தாளாகக் கொண்டு கடிதம் எழுதினுள். இளவேனில் என்பான் அரசாள்கிருன். அவனுடைய ஆட்சியில் இவ்வுலகில் பிறந்த உயிர்கள் எல்லாம் தத்தம் துணேகளோடு புணர்ந்து மகிழ்கின்றன. அந்திப் பொழுதில் தோன்றி ஆட்சி செய்யும் இந்தத் திங்கட்செல்வனே நல்லவனுக இல்லே. கூடியிருந்த மக்கள் சிறிது பொழுது பிரிந்திருந்தாலும் மலரம்பு தொடுத்து அக்காதலர்களே வருத்துகிருன். பிரிந்த காதலர்கள் தத்தம் காதலியை மறந்தாலும் மணமலர் வீசி உயிரை வேதனே செய்கிருன். இது தாங்கள் அறியாததன்று. ஆகவே அருளல் வேண்டும் என்று எழுதுகிருள். கோவலனே மாதவி பிரிந்து அறியாள். கானல்வரிப் பிரிவே முதற் பிரிவாகும். இளவேனில் காலமும் மாலேயில் எழுந்த திங்களும் அவளுக்குப் பிரிவுத் துயரை உண்டாக்கிக் காதல் உணர்ச்சியைப் பெருக்கின. தன் காதலேக் காதலன் ஆயினும் நேரே சொல்வது தமிழ் மரபில்லே. ஆதலின் மாதவி உலகில் தத்தம் கணவரைப் பிரிந்த காதலியர் அடைகின்ற துன்பத்தைப் பொதுவாகச் சுட்டுகிருள். அவர்கள் நிறை யுடையவர்களாகக் காதலே அடக்கிக்கொள்ளப் பார்த்தாலும் இளவேனில் ஆகிய பெரும்பொழுதும் மாலேயாகிய சிறுபொழுதும் அவர்கள் நிறையைக் கலேக்கின்றன என்று கால ஆற்றலேச் சுட்டுகிருள். பொதுக் காதலின் பொதுநிலேயைச் சொல்லுவாள் போல

மாதவி நனி நாகரிகமாகக் கோவலனைப் பிரிந்த பிரிவு தன்னால் தாங்குதற்கு இயலாதென்று வலியுறுத்துகின்றாள். காதற் கடிதம் குறிப்பு நடையாகத்தான் இருக்கவேண்டுமென்று மாதவியின் கடிதத்தால் நாம் அறிகின்றோம். கடிதப்பொருளும் சிறந்தது. கடித நடையும் சிறந்தது. அதற்கேற்பக் கடிதம் எழுத மேற்கொண்ட கருவிகளும் தாள்களும் சிறந்தனவாக இருக்கவேண்டும் என்று இளங்கோ எழுதியுள்ளார். தாழையின் வெண் மடல் எழுதுதாளாயிற்று; செம்பஞ்சுக் குழம்பு எழுது மையாயிற்று; சிவந்த பிச்சி அரும்பு எழுதுகோலாயிற்று. இவ்வாறு மணப்பொருள்களே காதற் கடிதத்தின் கருவிகளாயின. இங்ஙனம் வரைந்த கடிதந்தான்—

"மன்னுயி ரெல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்
தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இறும்பூ தன்றுஇஃ தறிந்தீமின்"

—சிலம்பு – வேனிற்காதை.

என்பது. இக்கடிதத்தை மாதவி எழுதுங்கால் அதன் வாசகத்தைச் சொல்லிக் கொண்டே எழுதினாள் என்று இளங்கோ குறிப்பிடுகிறார். இதனால் மாதவியின் காதல் வேட்கை நமக்குப் புலனாகின்றது.

அரசியல் ஓலை.

அரும் பெருங் காப்பியமாகிய சீவக சிந்தாமணியில் காதற் கடிதங்களும் அரசியற் கடிதங்களும் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்துக் காதற் கடிதத்தைப் பார்த்த நாம் இக்காப்பியத்து ஓர் அரசியற் கடிதத்தைப் பார்ப்போம். கட்டியங்காரன் என்ற அமைச்சன் அரசன் சச்சந்தனைக் கொன்று நாட்டைக் கைப்பற்றினன். நாடு முழுவதும் அமைச்சன்மேல் பழிதூற்றியது. சச்சந்தனுடைய மைத்துனன் கோவிந்தன் கட்டியங்காரன்மேல் பெரும்பகை கொண்டான். இதனைத் தெரிந்த கட்டியங்காரன் அவனை ஒழிக்கச் சூழ்ச்சி செய்து, தன்மேல் யாதொரு பழியும் இல்லை யென்றும்—உண்மையைத் தான் உள்ளந் திறந்து சொல்லுகிறேன் என்றும்—சச்சந்தனைக் கொன்றது யானையே யென்றும் ஒரு கடிதம் எழுதுகின்றான்.

''விதையத்தார் வேந்தன் காண்க
கட்டியங் காரன் ஓலை
புதையவிப் பொழிலைப் போர்த்தோர்
பொய்ப்பழி பரந்த தென்மேல்
கதையெனக் கருதல் செய்யான்
மெய்யெனத் தானும் கொண்டான்
சிதையவென் நெஞ்சம் போழ்ந்து
தெளிப்பினும் தெளிநர் யாரே''

—சீவக சிந்தாமணி
—மண்மகள் இலம்பகம்: 43

என்பது பாடல்.

இன்னர் இன்னருக்கு எழுதிக்கொண்டது என்று நாம் எழுதுவதுபோல் ஒரு கடிதம் திருத்தக்க தேவர் காலத்து எங்ஙனம் தொடங்கப் பெற்றது என்பதனை "வேந்தன் காண்க"–"கட்டியங் காரன் ஓலை" என்ற முதலடி நமக்குக் காட்டுகிறது.

திருமுகப் பாசுரம்.

இஃதோர் உதவிக் கடிதம். இறைவன்பால் பேரன்பு பூண்டவர் பாணபத்திரர். ஒருநாள் சேரமான் பெருமாள் நாயனருக்கு இறைவன் திருமுகம் எழுதி அதனைப் பாணபத்திரனிடம் கொடுத்து அனுப்புகின்ருர். அதில் யாழ் நூல் வல்ல பாணபத்திரனுக்குப் பொருள் கொடுத்து என்பால் வரவிடுக என்று எழுதுகிருர். அத்திருமுகம்–

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

என்று பதினோராந் திருமுறையிலுள்ளது. இறைவன் எழுதிய கடிதம் ஆதலால் இது திருமுகப் பாசுரம் என்றே ஆன்றோரால் வழங்கப்பெறுகிறது. கடிதம் எழுதியவர் சிவன் என்பதும்-எழுதப்படுபவர் சேரன் என்பதும்–பாணபத்திரனுக்கு உதவி கருதி எழுதப்பட்டது என்பதும் இப்பாசுரத்தால் தெளிவாகின்றன. இன்று உரைநடையில் எழுதும் கடிதத்திற்கு இதனை முன்னோடியாகக் கருதலாம். மேலும் இக்காலச் சிபாரிசுக் கடிதத்திற்கும் இதனை ஒப்பிடலாம்.

### சீட்டுக் கவிகள்

சீட்டுக் கவி என்பது ஒரு பெருமிதக் கவியாகும். தனிச்செய்யுட் சிந்தாமணி – தனிப்பாடல் திரட்டு முதலான நூல்களின் மூலம் புரவலர்களுக்கும்—கலைஞர்களுக்கும்–புலவர்கள் எழுதிய எண்ணிறந்த சீட்டுக் கவிகளை நாம் பார்க்கலாம். மேலும் நீதி மன்றங்களுக்குக் கொடுக்கப் பெற்ற விண்ணப்பக் கடிதங்களையும் நாம் காணலாம். இவையெல்லாம் நமக்குக் கிடைத்தற்கரிய செல்வங்களாகும். 1919-ஆம் ஆண்டு மே மாதம் இரண்டாந் தேதி எட்டையபுரம் வெங்கடேசு ரெட்டப்ப பூபதி அவர்களுக்குக் கவியரசர் சுப்பிரமணிய பாரதியார்–

"புவியனைத்தும் போற்றிடவான்
புகழ்படைத்துத்
தமிழ்மொழியைப் புகழிலேற்றும்
கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லையெனும்
வசையென்னாற் கழிந்த தன்றே"

என்று அரச நடையில் பெருமிதம் தோன்றச் சீட்டுக் கவிகளும் ஓலைத் தூக்குகளும் விடுக்கிறுர்.

தமிழ் இலக்கியத்தில் காதற் கடிதம் – அரசியல் ஓலை – திருமுகப் பாசுரம் – சீட்டுக் கவிகள் என்ற பலவகையான கடித முறைகளைக் கண்டோம். இக்கடிதங்கள் அவ்வக் காலத்து இயல்புகளையும் கடிதப் பண்புகளையும் – அமைப்புகளையும் நமக்குத் தெளிவாக்குகின்றன. கடிதக் கலை ஓர் இலக்கியக் கலையாகும். இக்கலை இன்னும் இலக்கியமாக வளர்க! வாழ்க!



# நமச்சிவாயப்புலவரின் தனிப்பாடல்கள்

புலவர்கள் சொல்லின் செல்வர்கள். அவர்கள் சொற்களின் மதிப்பையுணர்ந்து அம்மதிப்புக் குறை யாதபடி சொற்களைச் செலவிடுவார்கள். இன்ப துன்பங்களால் ஆகிய சம்மட்டிகளால் உருவான வாழ்க்கையையுடைய பொதுமக்கள் உள்ளத்தில் புலவர்களின் சொற்கள் பாய்ந்து அவர்கள் உள்ளம் கிளர்ச்சியடையும்படி செய்கின்றன. உயர்தரமான திரைப்படம் ஒன்றைப் பார்க்கப்போகும் இளைஞன் ஒருவனுக்கு மனம் எம்மாதிரிப் பூரிப்பால் பொங்கி வழியுமோ அம்மாதிரி உயர்ந்த இலக்கியத்தைப் படிக்கத் தொடங்கும் ஒருவன் மனமும் பூரிப்பால் பொங்கி வழியும். இவ்வாறு இன்ப மூட்டும் இலக் கியங்களில் சுவைமலிந்த பாடல்கள் பல அனுபவம் நிறைந்த புலவர்களால் இயற்றப்பட்டுத் தொகுக்கப் பட்ட இலக்கியமாகிய தனிப்பாடல்திரட்டு – தலை

சிறந்ததாகும். இவ்விலக்கியத்தில் புகழ்பெற்ற புல வர்கள் வரிசையில் நமச்சிவாயப்புலவரும் ஒருவர் ஆவார். இவர் தமிழ் நாடெங்கும் சுற்றிப்பார்த்தவர். ஆங்காங்கே தான் சேவித்த தலங்களைப்பற்றியும் தான் பழகிய வள்ளல்களைப்பற்றியும் நயம்படப்பாடி யுள்ளார். இவர் இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதியரசரின் அவையில் புலவராயிருந்திருக் கின்றார். முத்துராமலிங்கசேதுபதியவையில் அமைச் சராக விளங்கியவர் முத்திருளப்பபிரபு எனப்படுவார். இவர் சிறந்த வள்ளல். அக்காலத்தே முத்திருளப்ப பிரபு ஒரு கோயிலைக்கட்டி முடித்திருந்தார். வானோங்கி நிமிர்ந்து நிற்கும் அக்கோயிலின் தூண் கள் மலைகளைப் பெயர்த்து நட்டதுபோலக் காணப் பட்டன. பூமியின் அடியில் உறங்கிக்கொண் டிருந்த உயர்ந்த கற்களை வெளிக் கொணர்ந்து ஓவியம் சிற்பம் முதலிய கலைகட்குரிய கோயிலாகச் சமைத்திருந்தார். இத்தகைய கோயிலுக்குள் நமது நமச்சிவாயப்புலவர் நுழைந்தார். அக்கோயிலுக்குள் நுழைந்ததும் பல்லாயிர ஆண்டுகட்கு முன்பிருந்த நாகரிக உலகத்துக்குள் நுழைவதுபோன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டுவிடுகிறது. உடனே பாடுகின்றார் – 'பருப்பதங்கள் ஒவ்வொருதூண், பாவுக்கல் வளையாத பாரமேரு' என்று. தூண்கள் மலைகளைப் போன்றவையாம். மேலே பரப்பிய பாவுக் கற்கள் மேருமலையைப் போன்றனவாம். தூண்களை வேண்டுமானால் மலைகளாகச் சொல்லட்டும், மேலே பரப்பிய கற்களை மேருமலைகளாகச் சொன்னால் அஃதெப்படிப் பொருந்தும்? இந்த இடத்தில்தான் நமச்சிவாயப் புலவரின் கருத்தாழம் புலனாகின்றது. மேருமலையானது விநாயகர் முதலிய தெய்வங்களால்

ம்பாரதம் முதலிய இதிகாசங்களை எழுதப்பெற்ற பெருமையினையுடையது. இஃதேபோல் முத்திருளப்ப பிரபுவால் கட்டப்பட்ட கோவிலுக்குள் நுழைந்து மேற்றளத்தை அண்ணாந்து நோக்கியதும் அந்த மேற்றளத்தில் பரப்பிய கற்களில் ஓவிய வடிவில் இதிகாசபுராணங்கள் தீட்டப் பெற்றிருப்பதைக் கண்டார். கண்டதும் மனம் மகிழ்ந்து பாவுக்கல் வளையாத பாரமேரு என்று பாடுகிறார். இப்பொழுது தெரிந்துவிட்டது பாவுக் கல்லை வளையாத பாரமேரு என்று உவமித்ததன் உண்மை. கோயிலழகில் ஈடுபட்ட புலவர் இங்ஙனம் செம்மையாயமைந்த கோயில் திருப்பணிக்கு வேறொரு காரணத்தையும் நுட்பமாகக் கற்பிக்கிறார். அது வருமாறு:- கலைகளின் இருப்பிடம் தாமரை மலர். தாமரை மலரில் வாழ்பவன் பிரமன். பிரமன் மனைவியுங் கலைமகளாவாள். பிரமன் வாய் வேதங்களைப் பொழிகின்றது. அவன் கைகள் உலகங்களைப் படைக்கின்றன. இத்தகைய பிரமன் பூலோகத்தில் சிறந்த கோயிலொன்றை நிர்மாணிக்க நினைத்தான். அதற்காக வேண்டிப் பிரம்மதேவனே முதன் முதலில் ஒரு திருப்பணியை முத்திருளப்ப பிரபுவின் தாய் வயிற்றிலே தொடங்கினான். அவ்வம்மையார்பால் முத்திருளப்ப பிரபுவைக் கருக்கொள்ளும்படியாகச் செய்து அக்கருவில் முத்திருளப்ப பிரபுவின் உருவை அழகுபட அமைத்துக் கோயில் திருப்பணிக்கு வேறுயாரும் இணையில்லை என்று சொல்லத்தக்க திறமை படைத்த மனிதனைப் பிறப்பித்து அப்பிரபுவின் மூலம் தான் நினைத்ததைச் சாதித்துக் கொண்டான் என்று கூறுகின்றார். கோயில் திருப்பணியைச்

செய்ய நினைத்த பிரமன் முத்திருளப்ப பிரபுவைப் படைத்தலாகிய திருப்பணியைச் செய்தான். கருவிலேயே திருவுடைய முத்திருளப்ப பிரபு பிரமன் திருவுளப்படி சிறந்த கோயிலை நிர்மாணித்தலாகிய கோயில் திருப்பணியை முடித்தான் என்று கூறுகின்றார். இங்ஙனம் கூறுகின்ற கருத்துக்கள் நிறைந்த பாட்டே

"பருப்பதங்கள் ஒவ்வொரு தூண் பாவுக்கல்
வளையாத பார மேரு
சுரிப்படங்காப் போதிகை நீ செய்தபணி
விடையையென்ன சொல்வேன் ஐயா
தருப்பொலியும் கரதலமுத் திருளப்ப
சாமி நின் தாய்ப்பால் உன்னைக்
கருப்பணிமுன் திருப்பணிக்கென்
றுருப்பணினன்
மருப்பொலியும் கமலத் தோனே"

—என்பதாம்.

கோயில் திருப்பணியழகையும் — முத்திருளப்ப பிரபுவின் திறமையையும் எளிய சொற்களால் நயம்பட அமைத்துள்ள நமச்சிவாயப் புலவரின் கவிதையும் ஒரு திருப்பணியன்றோ!

நமச்சிவாயப் புலவரின் காலத்தவர் சீதக்காதி யெனப்படும் வள்ளல். இவர் புலவர்களுடைய காப்பாளராக விளங்கியவர். இவ்வள்ளலின் வீதி வாசற்படியிலே புலவர்கள் தம் வறுமை தீர்க்கும்

பொருளின் பொருட்டும், அரசர்கள் வள்ளலிடம் அரசாங்க அறிவுரையைக் கேட்கும் பொருட்டும் காத்துக்கொண்டு கிடப்பார்களாம். இக்குறிப்பை நமச்சிவாயப் புலவர் "அவன் தெரு வாயிலிலே கிடக்கும்–கவியும் பரராஜரத் நகிரீடமுமே" -என்று புகழ்வதின் மூலம் புலப்படுத்தியுள்ளார். மேலும் சீதக்காதிப்பிரபு இறந்ததைக் குறித்து இவர் பாடிய சரமகவி யொன்றே அவ்வள்ளலின் எல்லா இயல்பு களேயும் படம்பிடித்துக் காட்டுகின்றது.

சீதக்காதி மனேவாக்குக் காயம் ஆகிய மூன்ருலும் தூய்மை நிறைந்தவர். தூய்மையோடு கூட அம்மூன்றும் திருத்தமாயமையப் பெற்றவர் என்பதை முறையே விளக்குகிருர். முதன் முதல் அவருடைய நாவன்மையைப் புகழ்ந்து நாவலர் கோமான் என்றழைக்கின்ருர். சீதக்காதியின் திருமேனி அழகுநிறைந்த தென்பதை அழகர்மால் என்ற தொடரால் குறிப்பிடுகிருர். தன்னே யாசித்தவர்களே வேறு யாராவது யாசித்தால் அவர் களுக்கும் இல்லேயென்று கூருதபடி அவர்கள் கொடுக்கும்படியாகச் சீதக்காதி வள்ளல் பொருளே அள்ளி அள்ளிக் கொடுக்கக்கூடிய மனேவளம் படைத்தவர் என்ற கருத்தை நயமாகக் கொடை மிகுந்த சீமான் – என்ற தொடரால் குறிப்பிடுகிருர். இத்தகைய அறிவுக் களஞ்சியமாக விளங்கிய அவ் வள்ளல் இறந்தது புலமையே உலகில் இல்லாமல் இறந்துவிட்டதாக ஆகும் என்றும் வருந்துகின்ருர். அவ்வருத்த மிகுதியினுலே செல்வத்தின் அதிபதி யாகிய மகாலட்சுமி இருந்தும் அதை உலகுக்குப் பயன்படுத்தும் சீதக்காதி இல்லாமையால்

பயனில்லை யென்றும் அங்கலாய்க்கிருர். இந்த அங்கலாய்ப்போடு கூடிய பாட்டுத் தான்

"பூமா திருந்தென்? புவிமா
திருந்தென்ன? பூதலத்தில்
நாமா திருந்தென்ன? நாமிருந்
தென்னநன் னுவலர்க்குக்
கோமான் அழகமர் மால்சீதக்
காதி கொடைமிகுந்த
சீமான் இறந்திட்ட போதே
புலமையும் செத்ததுவே!"

என்பதாகும்.

இந்தக் கவிதையின் மூலம் வள்ளல் சீதக்காதியினியல்பு மாத்திரமல்ல புலவர் நமச்சிவாயர் அவரிடங் கொண்டுள்ள உண்மையான அன்பும் புலனுகின்றது. அப்பாட்டு கூலிக்கு மாரடிக்கும் பாட்டல்ல. ஆழ்ந்த அன்பிலிருந்து உதயமான வருத்தமிகுதியைக் காட்டும் பாட்டு.

ஒரு சமயம் நமச்சிவாயப்புலவர் வறுமையால் உந்தப்பட்டுப் பல பிரபுக்களின் வீட்டு வாசற்படி ஏறி யாசித்தும் பொருள் கிடைக்காமல் மிகவும் துன்பப் பட்டிருக்கிருர். ஒரு சில பிரபுக்கள் "கவிதையென்ருல் என்ன? அது எந்தக் கடையில் கிடைக்கும்?" என்று கேட்கும் நிலையினராயிருந்திருக்கின்ருர்கள். அதுமாத்திரமல்ல. "பணமில்லை போய் வாருங்கள்" என்று சொல்வதைக் கொஞ்சம் மனிதத்

தன்மையோடு சொல்லியிருக்கக் கூடாதா? மிகவும் மூர்க்கத்தனமாய்ப் பதில் சொல்லியிருக்கிறார்கள். இவர்களால் மனம் நொந்த புலவர் திலகம் நமச்சிவாயரைச் செல்லூரன் என்கின்ற பெயரையுடைய பிரபு ஒருவர் வலிய அழைத்து உள்ளன்போடு பாராட்டி, வேண்டும் பொருள்களை அளித்துப் புலவரின் கையைத் தம்முடைய கையால் பற்றி அவருடைய விரலில் விலையுயர்ந்த மோதிரமொன்றை இட்டார். இந்த வண்மையைக் கண்ட நமச்சிவாயப் புலவருக்கு ஆனந்தமேலிட்டது. ஆனந்தத்தால் திளைத்த அப்புலவருக்கு முன்பு தன்னை விரட்டியடித்த பிரபுக்களின் நினைவு வந்தது. தன் கணையாழியைப் பார்த்துக்கொண்டே பாடுகிறார்.

"காவொன்றுங் கைத்தலத்
தண்ணல்செல் லூரன் கனிந்துநம்மை
வாவென் றழைத்திட்ட
மோதிர மேவண்மை யானதமிழ்ப்
பாவொன்றும் சற்று
மறியாத புல்லர்தம் பக்கலிற் போய்த்
தாவென்று கையெடுத்
தேற்காம லிட்ட தடையிதுவே"

என்பதாகப் பாடுகிறார்.

இப்பாட்டில் – செல்லூரன் இட்ட மோதிரமானது-தகுதியற்றவர்களிடம் சென்று பாட்டுப் பாடி யாசிக்காதபடி தடுத்த தடையென்பது அவருடைய மன அமைதியைப் புலப்படுத்துகின்றதல்லவா?

அடுத்தபடியாகத் தெய்வக் காதலைப்பற்றி ஓர் பாட்டு

மதுரைச் சொக்கலிங்கப் பெருமான்மீது காதல் கொண்ட ஒரு பெண் அப்பெருமானை நினைந்து நினைந்து உருகுகின்ருள். அணையை உடைத்துக் கொண்டு ஆறு பெருக்கெடுத்தோடுவது போன்று அவள் கண்களிலிருந்து மன உறுதியை உடைத்துக்கொண்டு கண்ணீர் பெருகி வழிகின்றது. இந்த நிலைமையை அப் பெண்ணின் தாய் உணர்ந்து கொண்டாள். சொக்கலிங்கப் பெருமானை நோக்கி முறையிட்டுக்கொள்ளும் தன் பெண்ணின் கண்ணீரைத் தடுக்க விதியற்றவனே என்று திட்டுகின்ற பாவனையில் சொக்கலிங்கப்பெருமானைப் பார்த்து, சொக்கே என்று கூப்பிட்டுச் செய்தியைச் சொல்கிருள். கரைபுரண்டோடிய வையை நதியின் பெருக்கையே அடைத்து விட்டோமே என்று செம்மாந்திருக்கும் பெருமானே என்னுடைய பெண்ணருகில் வந்து அவள் விருப்பத்தைப் பூர்த்தி செய் செய்தாலொழிய அவள் கண்ணீர் வெள்ளம் அடைபடாது. அடைத்தால் அடைபடுவதற்கு இவள் கண்ணீர் வையையாறல்ல-என்று இடித்துக் கூறி மகள் மீதுள்ள இரக்கத்தைப் புலப்படுத்துகிருள். நமச்சிவாயப் புலவர் காதலின் உண்மை நிலையை ஒரு தாய் கூறுவதுபோன்ற நிலையில் கூறி, சொக்கலிங்கப் பெருமானை அனுபவிக்கின்ருர். அந்த அனுபவமே பாட்டாக வடிவெடுக்கின்றது.

அப்பாட்டுத்தான்...

"படைத்தாம வேற்கன்ணி கண்ணீர்ப்ர
வாகப் பரவைபொங்கி

உடைத்தால் அடைத்தற் குபாயம்உண்
டோநறை யூற்றிதழித்
தொடைத்தார் மவுலியிற் சும்மாடு
கட்டிச் சுமந்துசுமந்து
அடைத்தால் அடைபடச் சொக்கே
இதுவையை யாறல்லவே.''

என்பது.

இதுபோன்ற தாய்கூறும் கூற்றுகத் தாண்டவ ராயவள்ளல்மீதும் ஒரு பாட்டுப் பாடியுள்ளார். தாண்டவராயவள்ளல் திருக்கோவலூர்க்கு அதிபதி யாவார். புலவரிடம் நண்பனைப்போல் பழகியவர். இவர்மீது காதல்கொண்ட பெண்ணின் நிலைமையைப் புலவர் தாயாக நின்று கூறுகின்றார். அப்பாட்டில் தாயானவள் தன்னுடைய மகளை உலோகங்களில் ஒன்றாகிய பொன்னாகவே உருவகப் படுத்தியுரைக்கின்றாள். பொன் – கொல்லனால் தன்னுடைய உலையில் வைத்து உருக்கப்படுவது போலவே தன்னுடைய மகளாகிய பொன்னும் உருவில்லாத மன்மதனாகிய கொல்லனால் உருக்கப் படுகின்றாளாம். தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் பெண்களுக்குப் பளிங்குமேடை, தென்றல், நிலா முதலிய இன்பந்தரும் பொருள்கள் துன்பந்தரு வனவாம். இதை மனத்துட் கொண்டு இன்பப் பொருள்கள் அனைத்தையும் ஓரினப்படுத்தித் தலைவியை உருக்கும் உலைக்களமாகக் கூறியுள்ளார். அஃதாவது உருவில்லா மன்மதனாகிய கொல்லன் பளிங்குமேடையை உலைக்களமாகக்கொண்டு, மாருதமாகிய தென்றலைத் துருத்தியாகக்கொண்டு,

சந்திரனுடைய ஒளிக்கதிர்களின் தொகுதியை உமியாகப் பரப்பி இடையிடைப்பரவிய இருட் செறிவைக் குடைந்து வைத்த கரியாகக்கொண்டு, அந்திவானமாகிய செக்கர் வானத்தை, தீயாகக் கொண்டு பனியாகிய கொடும்புகை கிளம்ப ஊதி என் மகளை உருக்குகின்றனே என்று உருவகப் படுத்தியுள்ளார்.

இதோ அந்தப் பாடல் பகுதி:–

"பாங்குயர் பளிக்குமே டைகொல் உலையா;
மாருதம் துருத்தியா; நீடும்
பகர் நிலாக் கற்றை பதடியா; மூடும்
படர் இருட் குழாம் குடை கரியா;

ஓங்கிய செக்கர் உள்ளிடுங் கனலா;
உயர்பெரும் பனிகொடும் புகையா
உருவிலி என்னுங் கொல்லன்என் பொன்னை
உருக்குமா றென்கொலோ உரையாய்"

என்பதாம்.

இம்மாதிரிக் கற்பனையழகுபடப் பாடும் புலவர்களில் நமச்சிவாயர் ஒருவராக விளங்கியதால்தான், தனிப் பாடல்களில் இவருடைய பாடல்களும் தொகுக்கப் பட்டன. சொற்களில் கருத்துக்களைப் புதைத்து வைத்துப் பாமரர்க்கும் பண்டிதர்க்கும் ஒரு படித்தாக வழங்கும் இப்புலவர் வாய்மொழி நீடுவாழ்க.



# முத்தொள்ளாயிரம்

## முன்னுரை

'காதலும்—அழகும்' கவிதையின் தாய்தந்தையர் என்பார் இலக்கிய ஆய்வாளர். ஆம், வெறும் உண்மைமட்டும் கவிதையாகாது. வெறும் உணர்ச்சியும் கவிதையாகாது. தன்னைத்தானே ஆராய்ந்து பார்க்கும் கவிஞன் ஒருவன், சமூகநிலையில் நின்று மக்களுடைய வாழ்வைக் காணும்பொழுது அவனுக்கு ஒரு நிலைப்பட்ட அனுபவம் காதல் உணர்ச்சியாக எழுகிறது. அவ்வனுபவ உணர்ச்சிக் காதல், பாநயம் கனியும் பண்பட்ட சொல்லழகோடு கலக்கும் பொழுதுதான் கவிஞன் உள்ளத்தில் 'கவிதை' வடிவெடுக்கின்றது. இவ்வாறு பிறந்த கவிதைகளின் தொகுதியே 'இலக்கியம்' எனப் பெயர்பெறும். பொதுவாக எந்தவித உணர்ச்சியும் காலத்திற்

கேற்ற வண்ணம் மாறுபாடடையு மென்பர். ஆனால் மக்கள் தோன்றிய நாளிலிருந்து அவரவர்களின் வாழ்வு முடியும்வரை, அவரவர்களின் வாழ்க்கையின் பின்னணியாகவே காதலும் – வீரமும் ஒலித்து வருகின்றன என்பதைச் சமுதாயத்தின் சரித்திரம் நமக்கு உணர்த்துகின்றது. அக்காலத்தில் மன்னர் களின் சிறப்பும் ‘வீரம் – காதல்’ என்ற இருவகை உணர்ச்சிகளில் அடங்கியிருப்பதைப் பலப்பல இலக் கியங்களின் வாயிலாக நாம் அறியலாம். வீரத்தை நிலைக்களனாகக் கொண்ட புறவாழ்வைப்பற்றிய இலக்கியங்களைப் புறமென்றும், காதலை நிலைக் களனாகக் கொண்ட அகவாழ்வைப் பற்றிய இலக் கியங்களை அகமென்றும் தமிழர் பிரித்தனர். அவ்வகை இலக்கியங்களைப் பின்பற்றி எழுந்ததே இந்நூலும். மன்னன்பால் காதல் கொண்ட மங்கை யின் மனநிலையையும் மன்னர்களின் போர் வீரத்தையும் நம் கண்முன் கொண்டுவந்து ‘காதலையும் – வீரத்தையும்’ விளக்குவதின் மூலம் பண்டைத் தமிழ் வேந்தர்களின் அகவாழ்வையும், புறவாழ்வையும் நாடகமாக்கிக் காட்டும் நாடக இலக்கியமே முத்தொள்ளாயிரம் எனலாம்.

## முத்தொள்ளாயிரம்

முத்தொள்ளாயிரம் என்பது முடியுடை வேந்தர் மூவரையும் பற்றி எழுந்த நூல். சேரனைப்பற்றித் தொள்ளாயிரம் பாடலும், சோழனைப்பற்றித் தொள்ளாயிரம் பாடலும், பாண்டியனைப்பற்றித் தொள்ளாயிரம் பாடலுமாக இரண்டாயிரத்து

எழுநூறு பாடல்களைக் கொண்டது. ஆகவே * முத்தொள்ளாயிரம் என்ற பெயரினையும் பெற்றது. இந்நூல் முழுவதும் வெண்பாயாப்பில் அமைந்துள்ளது. இந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்னர் இந்நூலைச் சுவைத்து மகிழ்ந்த 'புறத்திரட்டு' ஆசிரியர் நூற்றென்பது பாக்களை மட்டும் தம் தொகை நூலில் திரட்டி வைத்துள்ளார். அவற்றுள் கடவுள் வாழ்த்தாக ஒன்றும், சேரனைப் பற்றி இருபத்திரண்டும், சோழனைப்பற்றி இருபத்தொன்பதும், பாண்டியனைப்பற்றி ஐம்பத்தாறுமாக நாம் பிரித்துக் காணலாம். ஒரு பாட்டு சிதைந்து கிடைத்திருக்கிறது. ஒவ்வொரு மன்னனையும் பற்றிப்பாடும் பாடல்கள் அகம், புறம் எனப் பிரித்து இங்கு ஆராயப்பட்டிருக்கின்றன. அகம் முழுவதிலும் பெரும்பாலன கைக்கிளைச் செய்யுட்களாகவே அமைந்துள்ளன. ‡ கைக்கிளை

---

* 'மூன்று ஆறு ஏழ் குறுகும்' என்ற விதிப்படி மூன்று + தொள்ளாயிரம்—முன்று + தொள்ளாயிரம் என்றாகி, 'ஆறு ஏழ் அல்லவற்றின் ஈற்றுயிர் மெய்யும் ஏகும்' என்ற (நன்னூல் சூ-188) விதிப்படி இறுதி உயிர் மெய் கெட்டு முன் + தொள்ளாயிரம் என நின்றது 'மூன்றன் உறுப்பு அழிவும் வந்தது மாகும்' என்ற (நன்னூல் சூ-190) விதிப்படி'ன்' கெட்டு'த்' பெற்று முத்தொள்ளாயிரம் எனவாயிற்று.

‡ காண்டல் நயத்தல் உட்கோள் மெலிதல்
மெலிவொடு வைகல் காண்டல் வலித்தல்
பகன்முனி வுரைத்தல் இரவுநீடு பருவரல்
கனவின் அரற்றல் நெஞ்சொடு மெலிதல்
பெண்பாற் கூற்றுக் கைக்கிளை யாகும்!

-புறப்பொருள் வெண்பாமாலை;
கைக்கிளைப் படலம்-15

என்பது ஒருதலைக் காமம். அஃது இருவகைப்படும். அவை ஆண்பாற் கைக்கிளை என்றும் பெண்பாற் கைக்கிளை என்றும் கூறப்படும். ஆண்பாற் கைக்கிளை என்பது தலைவி தன்பால் அன்பு செலுத்திக் காதலிப்பதற்கு முன் தலைவன் அவள்பால் அன்பு செலுத்திக் காதல் விருப்பத்தால் காம மிகுதிக்கண் படுதலேயாம். பெண்பாற் கைக்கிளை என்பது தலைவன் தன்பால் அன்பு செலுத்திக் காதல் கொள்வதற்கு முன் தலைவி அவன்பால் அன்பு செலுத்திக் காதல் கொண்டு காமம் மிகுதிக்கண் படுதலே யாம். இவ்விருவகையில் இந்நூல் அகம் முழுமையும் பெண்பாற் கைக்கிளையே எனக்கொள்க.

புறம் மன்னர்களுடைய நாடு, நகரம், யானை மறம், குதிரைமறம், வென்றி, வீரம், கொடை, திறைப் பொருள் கொள்ளல், மன்னர்கள் பிறந்த நாள் விழா முதலியவற்றைப் பாராட்டிப் புகழ்வன வாய் அமைந்துள்ளன. இந்நூல் குறிப்பாக மன்னர்களைப் பற்றிப் பெயர், குலம், முதலியன வற்றால் சுட்டாது, பொதுப்படவே கூறிச்செல்கிறது, அவரவர்கள் குடிச்சிறப்புப் பெயர்களாலும், அவரவர் களின் ஆட்சிக்குட்பட்ட நாடு, நதி முதலியவற்றின் பெயராலுமே அவர்களைச் சுட்டுகிறது. நூலின்கண் சேரனைப்பற்றிக்கோதை, மாந்தைக்கோ, குடநாடன் வஞ்சிக்கோ, பூழியர்கோ, சொல்லியர்கோ, வானவன் முசிறியார் கோமான் என்றும், சோழனைப்பற்றி உறந்தையர் கோன், கோழிக்கோமான், வளவன், செம்பியன், கிள்ளி, நீர்நாடன், புகாஅர்ப் பெருமான், சென்னி, காவிரி நீர்நாடன் என்றும், பாண்டியனைப் பற்றி மாக்கடுங் கோன், மாறன், கூடற்கோமான்,

தென்னன், செழியன், வழுதி, தமிழ்நற்பெருமான், பொதியிற் கோமான், சேலேக வண்ணன், வையை யார் கோமான், கொற்கைக் கோமான், பஞ்சவர் என்றும் ஆசிரியர் குறிப்பிடுதல் உற்று நோக்கத் தக்கது. சோழன் குதிரை பாடலம், என்றும், பாண்டியன் குதிரை கனவட்டம் என்றும் அழைக்கப் பெறுகின்றன.

## கற்பனைக் களஞ்சியம்

'நாள்தோறும் நாம் காணும் இயற்கைப் பொருளிலும், மற்றவற்றிலும் ஒரு புதுமையைக் காணுகின்ற நிலை – உணர்ச்சிப் புயல் தன்வசப் படுகின்ற பேராற்றல்–இவை போன்ற தன்மைகளை விளக்கும் ஆற்றல்தான் கற்பனை' – என்கிறார் கோல்ரிட்ஜ் என்ற கவிஞர். 'சேரநாடு' என்ற தலைப்பின்கீழ் அந்நாட்டில் தாம்கண்ட இயற்கைக் காட்சியைக் கற்பனை ஓவியமாக்கிக் காட்டுகிறார் கவிஞர். சேரனிடம் பரிசுபெற வந்தார் கவிஞர். வழியில் அவன் நாட்டு இயற்கை வளத்தைக் கண்டு களித்தார். சேற்றோடு நீர் நிறைந்த பள்ளம் ஒன்றில் சிவந்த செவ்வாம்பல் பூக்கள் பூத்து மலர்ந்திருந்தன. அங்கு அன்னப் பறவைகள் தங்கள் குஞ்சுகளை இறக்கைகளால் அணைத்து விளையாடிக் கொண்டிருந்தன. இக்காட்சி கவிஞர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. பின் மன்னனிடம் சென்றார். மன்னனிடம் தான் கண்ட காட்சியோடு தன் கற்பனை அழகுதோயப் பேசுகிறார். மன்னா! உயர்ந்த செங்கோலனுடைய நாட்டில் எல்லா உயிர்களும்

பயமின்றி வாழவேண்டியது தானே! ஆனால் உன்னுடைய நாடு, சிவந்த செவ்வாம்பல் பூக்களைக் கண்டு, புள்ளினங்கள் நீரில் தீப்பற்றி விட்டதோ எனப் பயந்து தங்கள் தங்கள் குஞ்சுகளைக் கைச் சிறகுகளால் அணைத்துக் காப்பாற்றுகிற இத்தகைய பயத்தை உடையதாயிருக்கிறதே! என்று கூறுவதின்மூலம் அவனது ஆட்சித்திறமை கற்பனை தோயப் பேசப்படுகிறது இப்பாட்டில்:—

அள்ளற் பழனத்
    தரக்காம்பல் வாய்அவிழ
வெள்ளந்திப் பட்ட
    தெனவெரீஇப் – புள்ளினம்தங்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும்
    கவ்வை உடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை
    நாடு!

(பா–14).

நோய்க்கு மருந்துண்டு. காதல் நோய்க்கு மருந்தேது? சேரனிடம் காதல் கொண்டாள் ஒரு பெண். காதல் நோயால் மெலிந்தாள். அவள் காதல் உள்ளம் அறியாத தாய், இது தெய்வத்தால் வந்த குறை என்றெண்ணி, வேலனுக்கு காதல் வெறியாட்டெடுக்கக் காராட்டைப் பலிகொடுக்க ஏற்பாடு செய்கிறாள். இதைக்கண்ட தலைவி தோழியிடம், இரத்தம்தூவி, களம் அமைத்து, வெறியாட்டெடுத்துக் குடத்து நீரால் நீராட்டினால் என் நோய் நீங்கி விடுமா

என்ன! என்னே தாயின் அறியாமை! என்று கூறி நகைக்கிருன். இப்பாடல் வருமாறு:-

காராட் டுதிரம்தூஉய்
அன்னை களன்இழைத்து
நீராட்டி நீங்கென்றல்
நீங்குமோ? – போராட்டு
வென்று களங்கொண்ட
வெஞ்சினவேற் கோதைக்கென்
நெஞ்சங் களங்கொண்ட
நோய்!
(பா–11)

பொதுவாகக் குற்றம் செய்தால்தான் தண்டனை. குற்றம் செய்யாமலிருந்தால் தண்டிப்பது முறையில்லைதானே! சோழனைப் பற்றிக் கூறும்பொழுது ஒரு பெண் கூறுகிருள்; தன்னுடைய கண் மன்னனைப் பார்த்தது. தன்னுடைய நெஞ்சு அவனோடு கலந்தது. இரண்டும் குற்றம் செய்தவை தாம். ஆனல் ஒரு குற்றமும் செய்யாத என்னுடைய தோள்கள் தண்டிக்கப்படுகின்றனவே. ஏன்? என்று தான் காதலால் வாடும் குறிப்பைத் தெரிவிக்கின்ருள்.

கண்டன உண்கண்
கலந்தன நல்நெஞ்சம்
தண்டப் படுவ
தடமென்தோள்! (பா-33)

என்று கேட்பதும், மன்னனைக் காணக் கூடாது என்று அன்னை கடிய, மகள் தோழியிடம், 'அன்னையும் என்னைப்போல் இளமையோடு வாழ்ந்து காதல் உணர்ச்சிக்கு ஆட்பட்டுத்தானே முதிய நிலையை அடைந்திருக்க வேண்டுமென்பதை-

'... .... .... ... .... அன்னை
இளையளாய் மூத்திலள் கொல்லோ!'

(பா–54)

என்பதும், பாண்டியனைப் பணியாதார் நாடு நகரம் முதலியவற்றை இழப்பதுசரி, பணிந்து கை தொழுத நானுமா என் பருவ அழகு முதலியவற்றை இழக்க வேண்டும்? என்பதைக் கற்பனை நயஞ்செறிய விளக்குகின்ற,

களியானைத் தென்னன்
இளங்கோவென் றெண்ணிப்
பணியாரே தம்பார்
இழ்க்க – அணியாகங்
கைதொழு தேனும்
இழக்கோ! நறுமாவின்
கொய்தளிர் அன்ன
நிறம்!

(பா–56)

என்ற பகுதியும், பாண்டியனுடைய பொருள்களாகிய–சங்கு வளையல்கள், சந்தனம், முத்துக்கள் முதலிய எல்லாவற்றையும் தன் உடலில் அணிந்திருந்தும் தன் தோள்கள் ஏன் மெலிகின்றன என்பதின் மூலம் தான் அவனை அடையவில்லையே என்ற தன் காதல் தவிப்பை ஒரு பெண்,

கைய தவன்கடலுள்
சங்கமால் பூண்டதுவும்
செய்யசங் கீன்ற
செழுமுத்தால் – மெய்யதுவும்
மன்பொரு வேல்மாறன்
வார்பொதியிற் சந்தனமால்
என்பெரு வாடும்என்
தோள்!

(பா–67)

என்று வெளியிடுவதும், பாண்டியன் மேற்கொண்ட காதலே அவனது வையை ஆற்ருேடு தொடர்பு படுத்தி அலர் தூற்றுகின்றனர் ஊரார் என்பதை,

ஏற்பக் குடைந்தாடில்
ஏசுவர் அல்லாக்கால்
மாற்றி யிருந்தாள்
எனவுரைப்பர் (பா–84)

என்று விளக்கும் பகுதியும், இரவைப்பார்த்து,

புல்லாதார் வல்லே
புலர்கென்பர் புல்லினுர்
நில்லா இரவே
நெடிதென்பர்

(பா–86)

என்று கூறும் பகுதியும் சிந்தனைக்கு நல்விருந்து தரும் சிறப்புடைய பகுதிகளாம். பிறமக்கள் உதவி

செய்யலாம்; செய்யாமலு மிருக்கலாம். ஆனால் ஒரு குடிப் பிறந்த உறவினர் கண்டிப்பாய் உதவி செய்வர் என்பது வழிவழி வழங்கும் சொல். பாண்டிய மன்னன்மேல் கொண்ட காதல் நோயால் மெலிந்து, தன் கையில் அணிந்திருந்த சங்கு வளையல்கள் நெகிழ நிற்கின்றாள் ஒரு பெண். மன்னன் உலாவருவதைச் சங்கின் இனமான வலம்புரிச் சங்கு முழங்கிற்று. அவன் வருகை ஒலி கேட்ட வுடன் பூரித்தாள். கைவளை விழவில்லை. சங்கினம் சங்கினத்திற்கு உதவிக் காத்தது என்பதை அவள்,

செய்யார் எனினும்
தமர்செய்வர் என்னுஞ்சொல்
மெய்யாதல் கண்டேன்
விளங்கிழாய்!–கையார்
வரிவளை நின்றன
வையையார் கோமான்
புரிவளை போந்தியம்பக்
கேட்டு!

(பா–80)

என்று கூறும் இப்பகுதி எண்ணி எண்ணி இன்புறத் தக்கதொன்றாகும்.

மூவேந்தரும் போர்த்திறத்தில் வலியுற்றிருந்தனர். அவர்தம் படைகளும் வெற்றி ஒன்றைத் தவிர வேறொன்றும் அறியாதனவாயிருந்தன.

வீரம் அதிலும் மூவேந்தரின் யானைப் படையோ போர் வீரத்தில் முதலிடம் பெறுகின்றது. பலப்பல போர்களில் மாற்றார்தம் வெண் கொற்றக் குடையைப் பிய்த்து எறிந்து வெற்றி

பெறும் பயிற்சி மிகுந்தது சேரனுடைய போர்யானை. ஒருமுறை போர் வெறியோடு மாற்றாரைத் தாக்கிற்று. மாற்றார் வீழ்ந்தனர். வெறியோடு ஓடிவருகிறது. எதிரில் மாற்றார் படை ஒன்றும் காணாது, சற்றும் சிந்தியாது மேல் நோக்கி முழு நிலவை மாற்றார் குடையெனக் கருதித் தன் துதிக் கையை நீட்டும் என்றார் கவிஞர்.

செங்கண்மாக் கோதை
சினவெங் களியானை
திங்கள்மேல் நீட்டுந்தன்
கை! (பா–19)

என்று சேரன் போர்வலி கூறுகின்றார் கவிஞர்.

சோழனின் யானை மறத்தை எடுத்து இயம்பும் பொழுது அது மாற்றார் மதிலைத் தாக்கியதால் அதன் கொம்புகளையும், மாற்றார்தம் மணிமுடியைக் காலால் இடறித் தள்ளியதால் அதன் நகங்களையும் இழந்தது. இழந்த குறைபாட்டை எண்ணி, தன் துணையைக் காண நாணி வாயிற் புறத்தே நின்றது என்கிறார்.

கொடிமதில் பாய்ந்திற்ற
கோடும் அரசர்
முடியிடறித் தேய்ந்த
நகமும் – பிடிமுன்பு
பொல்லாமை நாணிப்
புறங்கடை நின்றதே
கல்லார்தோட் கிள்ளி
களிறு! (பா–48)

பாண்டிய மன்னனின் ஆண் யானையின் இரண்டு கொம்புகளுக்கும் என்ன வேலை தெரியுமா? ஒரு கொம்பிற்கு மாற்ருர் மார்பை உழுவதும், மற்ருென்றிற்கு மாற்ருர் மதிலைத் திறப்பதுந்தான் என்கிருர்.

– ஒரு கோடு
வேற்ருர் அகலம்
உழுமே யொருகோடு
மாற்ருர் மதில்திறக்கு
மால்!

(பா–100)

மேலும் பாண்டியன் வீர உள்ளம் படைத்தவன் மட்டுமல்லன் அன்புள்ளமும் படைத்தவன் என்கிருர். தோற்ற, மாற்ருர்தம் மனைவியும் குழந்தையும் அடிபணிந்து கைதொழுது நாட்டை வேண்டினுல் உடனே அவன் உள்ளங் குழைந்து அருள்புரிவான் என்கிருர்.

தொழில்தேற்ருப் பாலகனை
முன்னிறீஇப் பின்னின்
றழலிலைவேல் காய்த்தினுர்
பெண்டிர் – கழலடைந்து
மண்ணிரத்த லென்ப
வயங்குதார் மாமாறன்
கண்ணிரத்தம் தீர்க்கும்
மருந்து!

(பா–108)

சோழ மன்னனை அவன் பிறந்த நாளில் வாழ்த்தும் பொழுது கவிஞர், வேதம் ஓதும் அந்தண்மையாளர்கள் பசுவும் பொன்னும் பெற, புலவர்களும் அமைச்சர்களும் யானைகளைப்பெற, இந்தச் சிலம்பி இனம் மட்டும் கூடிழந்து வருந்து கின்றதுவே! ஏன்?

அந்தணர் ஆவொடு
பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போல் மாண்ட
களிறூர்ந்தார் – எந்தை
இலங்கிலைவேற் கிள்ளி
இரேவதிநாள் என்னோ
சிலம்பிதன் கூடிழந்த
வாறு!

(பா–46)

என்று நகைச் சுவை ததும்ப வாழ்த்துகிறார். இம் மாதிரிப் புதுமைக் கருத்துக்கள் பயிலப் பயில இன்பந் தருவன வாயுள்ளன.

பொதுவாக உலகில் கருத்துக்களை விளங்க வைக்க உவமைகள் பெரிதும் பயன்படுகின்றன. இங்கே கவிஞர் நாள்தோறும் நாம் காணும் பறவை இனமாகிய காடைப் பறவையை வைத்துக் கொண்டு அருமையாக ஒருபெண்ணின் உள்ளத்தை விளக்குகிறார். பாண்டியன் மேல் காதல் உவமை கொண்ட ஒரு பெண்ணின் உள்ளத்தை அறியாத அவள் தாய், அவளை ஒரு அறையில் அடைத்து வைத்துக் காவல் இருந்தாள்.

இதை, கூட்டில் அடைபட்டதிலிருந்து உணவு உண்ணது சோர்ந்து கிடக்கும் காடைப் பறவையை, அதன் உள்ளம் அறியாது காக்கும் வேடன்போல் என்ற உவமையின் மூலம் நன்குணரவைக்கிருர்.

கோட்டெங்கு சூழ்கூடற்
கோமானைக் கூடவென
வேட்டாங்குச் சென்றவென்
நெஞ்சறியாள் – கூட்டே
குறும்பூழ் பறப்பித்த
வேட்டுவன்போல் அன்னை
வெறுங்கூடு காவல்கொண்
டாள்!

(பா–55)

அடுத்து, சேரமன்னன் உலாவரும்பொழுது, அவன்பால் காதல் கொண்ட மங்கை ஒருத்தி அவனைப் பார்க்க விருப்பத்தோடு தன்வீட்டு வெளி வாசலுக்கு வந்தாள். உடனே நாணம் வரத் திரும்பி உள்ளே சென்ருள். பின் ஆசை உந்தச் சென்று நாணம் வரத் திரும்பினுள். இவ்வாருக உணர்ச்சி வசப்பட்டு உள்ளந் தடுமாறினுள். இதற்குச் சீரும் சிறப்பும் பெருஞ் செல்வமும் படைத்த ஒருவர் காலம் செய்த சதியின் காரணமாக வறியவராகிப் பெருஞ் செல்வர்களிடத்து உதவி கேட்கச் செல்ல நேரிடுவதுண்டு; அப்போது செல்வர்களிடம் வறுமை தூண்டச் சென்றும், பின் நாணம் இழக்கத் திரும்பியும், ஒரு முடிவுக்கும் வராது அலையும் நிலையை உவமை கூறுகிருர்.

ஆய்மணிப் பைம்பூண்
அலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று
கதவடைத்தேன் - நாணிப்

பெருஞ்செல்வர் இல்லத்து
நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென்
நெஞ்சு!

(பா–8)

மேற்கண்ட உவமைகள் என்றென்றும் உவமை ஊற்றுக்களாகவே நின்று காட்சியளிக்கும் என்பதில் ஐயமில்லை. ஆகவே இந்நூலை நாம் கற்பனைக் களஞ்சியம் என்றே அழைக்கலாம்.

முடிவுரை

முத்தொள்ளாயிரம் கற்பனைக் களஞ்சியமாய், இன்பக் கடலாய், வீரத்தின் விளைநிலமாய், உவமை ஊற்றாய் அமைந்துள்ளது. இத்தனை சுவை மலிந்த பாடல்களைப் பாடிய கவிஞர் யாரெனத் தெரியவில்லை. அவரைப்பற்றிய வேறு எந்தச் சரித்திரக் குறிப்புங் கூடக் கிடைக்கவில்லை. அவர், நூலின் கடவுள் வாழ்த்தைக் கொண்டும், 'செங்கண் நெடியான் மேல்' (பா–91) என்ற பாடலைக் கொண்டும் சைவ சமயத்தைச் சார்ந்தவ ரென்பது பெறப்படுகிறது. மேலும், 'மடங்கா மயிலூர்தி' (பா–90) என்ற பாடலால் அவர் முருகனிடத்தும், பாண்டியனிடத்தும் அளவிலாக் காதல் உடையார் என்பதும் பெறப்

படுகிறது. ஏனைய நாடுகளைக் காட்டிலும் பாண்டிய நாட்டைப் பெரிதும் சிறப்பித்துக் கூறுவதாலும், பாண்டியனைத் தமிழுக்கும், தமிழர்களுக்கும் உரியவன் என்று ஏற்றங்கொடுத்துப் பாடுவதாலும் இவர் பாண்டிய நாட்டவராயிருத்தல் கூடும்.

முத்தென ஒளி வீசிப் பயில் தொறும் பயில் தொறும் தித்திக்க இன்பம் பயக்கும் முத்தொள் ளாயிரம் தமிழ் மக்களுக்குக் கிடைத்தற்கரிய செல்வப் படைப்பாகும்.



---

குறிப்பு:-

முத்தொள்ளாயிரப் பதிப்புக்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 | உயர்திரு. | ரா. ராகவய்யங்கார் பதிப்பு (மூலம்) | 1905 |
| 2 | ,, | எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்பு (புறத்திரட்டு)-மூலம் | 1938 |
| 3 | ,, | டி. கே. சிதம்பரநாத முதலியார் பதிப்பு (உரை) | 1943 |
| 4 | ,, | ந. சேதுரகுநாதன் அவர்கள் பதிபபு | 1946, 1952 |
| 5 | ,, | ரெ. முத்துக்கணேசன் (கவிஞர்) பதிப்பு | 1957, 1962, 1965 |
| 6 | ,, | வே. கபிலன் அவர்கள் பதிப்பு | 1958 |
| 7 | ,, | ந. சுப்புரெட்டியார் அவர்கள் பதிப்பு | 1965 |

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | |
|---|---|
| நல்லுரை வெண்பா (கவிதை) | 1–00 |
| முத்து மாலை ,, | 1–25 |
| முத்தொள்ளாயிரம் (உரை நூல்) (இவ்வுரை நூல் முன்பு சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் வகுப்பிற்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தது) மூன்றும் பதிப்பு | 2–00 |
| தமிழ்த் தொகை (தொகுப்புரை நூல்) | 1–75 |

குறிப்பு :- நல்லுரை வெண்பா ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

'RUBIES OF WISDOM'

English Translation

By :

V. RM. Chettiar, B. A.